# பொன் விழா

பிரபவ

1988

## கம்பன் மணி மலர்

கம்பன் கழகம் - காரைக்குடி






50

"கம்பனிடம் கற்றேன் கனிந்து..."

## கம்பன் மணி மலர்

# பொன் விழா மலர்

## 1988

பிரபவ பங்குனி 17 உ முதல் 20 உ வரை

1988 மார்ச் 30 முதல் ஏப்ரல் 2 வரை நிகழ்ந்த

**50 ஆவது கம்பன் திருநாள் வெளியீடு**

கம்பன் கழகம்

கம்பன் மணி மண்டபம், காரைக்குடி - 623 002

# உள்ளுறை

முன்னுரை 3

என்று தணியும் எங்கள் ஆசை 5

கம்பன் கழக உறுப்பினர்கள் 7

மலர்க் குழு 8

வாழ்த்துச் செய்தி 17

திருத்தசாங்கம் 33
— திரு. பூ. அமிர்தலிங்கன்

அறிவுடைமை 35
— நீதிபதி திரு. மு. மு. இஸ்மாயீல்

KAMBAN 55
— டாக்டர் கே. ஆர். சீனிவாச அய்யங்கார்

இறை உணர்வு 61
— திரு. அ. ச. ஞானசம்பந்தன்

THE DATE OF KAMBAR 67
— திரு. மு. அருணசலம்

காதல் விளையாட்டு 81
— டாக்டர் வ. சுப. மாணிக்கம்

மெய்யறிவு 97
— திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார்

ஆண்மை நலம் 99
— டாக்டர் தெ. ஞானசுந்தரம்

ஒழுக்கப் புதையல் 113
— மகாவித்வான் டாக்டர் ச. தண்டபாணி தேசிகர்

அடியார்க்கு அடியார் 121
— ஆத்தங்குடி திரு. பெ. மு. சுப்பையா செட்டியார்

குடிமை நிலை 129
— திரு. அரங்க. சீனிவாசன்

# முன்னுரை

கம்பன் ஓர் உலக மகாகவி; கவிச்சக்கரவர்த்தி; காப்பிய வானில் கதிரவனாய் நின்று ஒளிர்பவன். இவன் கல்லாத கலையும், வேதக்கடலும்; உலகில் இல்லை எனலாம். ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன், நம் தந்தை பிரான் கம்பன்.

முத்தரையரிடமிருந்து தஞ்சைப் பகுதியை மீட்டுச் சோழப் பேரரசை நிறுவிய விஜயாலயன் காலத்தில் மிளிர்ந்தவன் கம்பன். விஜயாலயன் மகன், கோதண்ட ராமன் எனப் பெயர் சூடிக்கொண்ட ஆதித்தன் காலத்தில், அவனால் பெரிதும் மதிக்கப் பெற்றவனாய் விளங்கியவன் கவிச்சக்கரவர்த்தி.

கம்பனை, பெற்ற தந்தையினும் பேணிக் காத்து நின்றவர் சடையப்ப வள்ளல். இன்று கதிராமங்கலம் என விளங்கும் வெண்ணெய் நல்லூர்தான் சடையப்பர் வாழ்ந்த வளநகர். கம்பனின் பல்துறைப் புலமையும், எல்லையிலாக் கவிதா சன்னதமும், கற்றோரை எல்லாம் ஈர்த்து நின்றன. முடியுடைத் தார் வேந்தர்களும், ரசிகப் பெருமக்களும், கம்பனைப் பெரிதும் மதித்துப் போற்று வாராயினர்.

கம்பனின் போற்றற் பெரும் புலமைக்கு என்றும் கட்டியங் கூறிக்கொண்டு நிற்கிறது அவன் அருளிய இராமாவதாரம் என்னும் இராம காதை! தமிழ் மொழியின் வளத்திற்கும், தமிழ்க் காப்பியத்திற்கும் ஒப்பற்ற உதவியாய் நின்று நிலவுவது கம்பராமாயணம். அதனால் கவிச்சக்கரவர்த்தி என்ற பட்டம் பிற் காலத்தில் வழங்கியது.

சகாப்தம் 807: கலியாண்டு 3986க்குச் சரியான விசுவாவசு-பங்குனி 4ஆம் தேதி (கி.பி. 886 பிப்ரவரி 22) புதன்கிழமை அத்த நட்சத்திரமே இராமாவதாரம் அரங்கேறிய பெருநாள்.

கம்பன் பிறந்த நாளைப்பற்றி நாமறிய எவ்வகைச் சான்றுகளும் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால் கவிச்சக்கரவர்த்தி பிறந்த நாளை நாம் நன்கு அறிவோம் டங்குனி அத்த நாளில்தானே கவிச்சக்கரவர்த்தி பிறந்தான்! எனவே இராமாவ தாரம் அரங்கேறிய அந்த நாளையே கம்பன் திருநாளாக ஏற்று விழா எடுத்து வருகிறோம். மகம், பூரம், உத்தரம் ஆகிய முதல் மூன்று நாள்களில் காரைக் குடியில் உள்ள கம்பன் மணி மண்டபத்திலும், பங்குனி அந்த நாளில் நாட்டரசன் கோட்டையில் கவிச்சக்கரவர்த்தி சமாதி கொண்டு எழுந்தருளி, அருள் சுரக்கும் கம்பன் பள்ளிபடைத்திருக்கோயிலிலும், தூய இலக்கியப் பெருவிழாவாகக் கொண் டாடி மகிழ்கிறது கம்பன் கழகம்.

இவ்விழா எவ்விதமான சாதி, சமய, மொழி, கட்சி வேறுபாடின்றி யாரும் கலந்து மகிழும் அருமையுடையதாகும். புலவர்களும் கலைஞர்களும், கவிஞர்

களும், திறனாய்வாளர்களும், ரசிகர்களுமாக ஆயிரக்கணக்கானவர்கள் ஆண்டு தோறும் வந்து கம்பன் புகழ் பாடியும், கம்பன் புகழ் பருகியும் பெருமை செய்கின்றனர்.

அமரர் சா. கணேசன் அவர்கள் காரைக்குடியில் 50 ஆண்டுகளுக்கு முன்பு எந்த நல்ல நோக்கங்களோடு கம்பன் கழகத்தைத் தோற்றுவித்தார்களோ, அவை இப்பொழுது கனிந்து முழுப் பயனை அளித்து வருகின்றன என்பதைத் தமிழ் கூறும் நல்லுலகம் நன்கு அறியும்.

அவர் காரைக்குடியில் கம்பன் விழாவை நடத்தி வந்த பாங்கையும், புலவர் பெருமக்களின் உயர்தரமான பேச்சையும் கண்டவர்களும், கேட்டவர்களும் பேரார்வத்தால் உந்தப்பட்டுத் தங்கள் பகுதியிலும் இது போன்ற கம்பன் கழகத்தை ஏற்படுத்திக் கம்பன் பணி செய்ய வேண்டும் என்ற நல்ல எண்ணங்களின் பிரதிபலிப்பே தமிழ் மண்ணெங்கிலும் கம்பன் கழகங்களின் தோற்றமாகும்.

ஒவ்வொரு மாதத்திலும் பல இடங்களிலும் கம்பனுக்கு விழா எடுத்து மகிழும் அளவிற்கு அவர் இட்ட விதை வளர்ந்து விரிந்து பல்லாயிரம் விழுதுகளைக் கொண்ட பேரால விருட்சமாக நின்று இலக்கியச் சுவையைக் கற்றார்க்கும், கல்லாதார்க்கும் ஜாதி, சமயப் பாகுபாடின்றி ஊட்டி மகிழ்கிறது.

தமிழக அரசும் கவிச்சக்கரவர்த்தி கம்பன் அவதரித்த புண்ணியத்தலமாகிய தேரழுந்தூரில் பெரும் செலவில் நினைவாலயம் அமைத்து விழா கொண்டாடுகிறது. கம்பன் திருநாள் கலைஞர்கள் விழாவாக இருந்து, மக்கள் விழாவாக விரிந்து, இன்று அரசு, விழாவாகக் கொண்டாடும் அளவிற்குக் கம்பன் புகழ் பரவியுள்ளது என்றால், அது கம்பன் அடிப்பொடியவர்களின் தனி மனித சாதனை என்பது எள்ளளவும் மிகையாகாது.

எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற்போல் கம்பன் அடிப்பொடி அவர்களின் நெடுநாளைய ஆசையும், வாழ்நாள் திருப்பணியுமாகிய கம்பன் மணி மண்டபம், தமிழ்த் தாய் திருக் கோயில் ஆகியவற்றைப் பூர்த்தி செய்வதற்கு இவ்வாண்டு தமிழக அரசு முன் வந்துள்ளது. அவர்களின் பணிக்கு இதைவிட வேறு கைம்மாறினை யாரும் செய்துவிட முடியாது. இப்பணியை நாம் தொடர்ந்து செய்வதுதான் கம்பன் அடிப் பொடியவர்களுக்குத் தமிழினம் செய்யும் ஒப்பற்ற கைம்மாறாகும்.

இத்தகு நல்ல நோக்கங்களோடு காரைக்குடியில் நடைபெற்று வரும் கழகத்தின் சார்பில் பொன்விழா ஆண்டு கம்பன் திருநாள் வெளியீடாக இந்த மலர் நறுமணத்துடன் உங்கள் கரங்களை அலங்கரிக்கின்றது.

இம்மலர் அனைத்து வகையிலும் அழகுடன் வெளிவருவதற்கு விளம்பரங்கள் அளித்தும், கருத்துச் செறிவுள்ள கட்டுரைகள் வழங்கியும் உதவிய அனைத்துப் பெருமக்கட்கும் பணிவார்ந்த வணக்கத்தையும் நன்றியையும் செலுத்திக் கொள்கிறோம்.

இம்மலரை மிக்க சிரத்தையுடன் உரிய காலத்தில் அச்சிட்டு உதவிய சென்னை பி.என்.கே. அச்சகத்திற்கு உளமார்ந்த நன்றி.

*கம்பன் மணி மண்டபம்*
*காரைக்குடி*
*30-3-1988*

அன்பும் பணிவுமுள்ள
**ஜி. கே. சுந்தரம்**
*தலைவர்*

# என்று தணியும்
# எங்கள் ஆசை?
# என்று திறக்கும்
# எங்கள் தமிழ்த்தாய் கண்?

'கம்பன் வாழ்க!'
வாழ்க! வாழ்க!!
கம்பன் புகழ் வாழ்க!
வாழ்க! வாழ்க!!
கன்னித் தமிழ் வாழ்க!
வாழ்க! வாழ்க!!

கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்த்த கோஷங்கள் இவை. கணேசனார் தம் கணீர்க் குரலில் ஒலித்து, கற்றோரை மட்டுமல்லாது, கல்லாத நல்லோரையும் கவர்ந்திழுத்த கோஷங்கள் இவை. காரைக் குடிவாழ் மக்கள் மட்டுமா, கன்னித் தமிழ் கூறும் உலகம் எல்லாம் மதித்த கோஷங்கள் இவை. அரை நூற்றாண்டு காலமாய்—ஆம்; ஒன்றல்ல, இரண்டல்ல, ஐம்பதாண்டுக் காலமாய்—கன்னல் நிகர் தமிழுணர்வை ஊட்டி வளர்த்த கோஷங்கள் இவை.

அவர்கள் இருந்து இந்தப் பொன் விழாத் தொடக்கம் நிகழ்ந்திருந்தால், நடப்பதே வேறு. கம்பனையும், கன்னித் தமிழையும் தம் இரு கண்ணைபோல் பாவிப் போற்றிமகிழ்ந்த அவர்கள் இருந்திருந்தால்... அதை யோசித்துப் பார்க்கவே, எங்களுக்கு மெய்சிலிர்க்கிறது; ரோமாஞ்சலியால் புளகாங்கிதம் நேர்கிறது; கண்களிலிருந்து ஆனந்தத் தாரை வழிந்து ஓடுகிறது.

அவர்கள் 18 ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்த்திய கம்பன் மணி மண்டபக் கால்கோள் விழா வணக்கவுரையிலிருந்து ஒரு சில பகுதிகளை இங்கே அப்படியே தருகிறோம்.

"இந்த மணி மண்டபம் நாப்பண் நனி விளங்க, இதன் தெற்கில் உலகத் தவிசில் ஓங்கியிருந் தருளும் கன்னித் தமிழ்த் தாயின் திருக்கோயில் திகழவும், வடக்கில் பன்னரும் பெரும் புகழ்ப் பழந்தமிழ்க் கலைகள் பயன் பிலிற்றும் கூடங்கள் மிளிரவும், நாற்புறமும் தமிழ் மணம் கமழவும் வேண்டும் என்பது பெருநோக்கம்.

தமிழ் அன்பர்களும், படிமக் கலைஞர்களும், வெளிநாட்டறிஞர்களும் மெய்யாகப் பாராட்டியது, நிகழ்காலத்தில் தோன்றிய தமிழ்த் தாயின் திருப்படிமம்.

படிமக் கலைத்துறையில், இத் திருப்படிமம், ஒரு சிறந்த புதிய அடைவு என்று படிமக்கலை வல்லுநர்கள் நெஞ்சார மொழிகின்றார்கள். இத்தகு தனித்துவம் பெற்ற, ஒரு திருப்படிமத்தைப் பெறும் பேற்றை ஆண்டவன் அருளால் நாம் பெற்றமைக்காகப் பெருமையும், பெருமகிழ்வும், உள நிறைவும் கொள்ள வேண்டும், கொள்ளுகிறோம். உலகமிசை உவந்திருந்தருளும் ஒரு தனிச் செம்மொழி யரசியாம் கன்னித் தமிழ்த்தாய் காரைக்குடியில் முதன் முத

லாகக் கோயில் கொண்டருளிக் காலமெல்லாம் பயன் சுரக்க அன்னை அவளருளை வேண்டி நிற்போம்.

மணி மண்டபத்து வடபால் அமையும் தமிழ்க் கலைதெரி கழகக் கூடங்களில் மொழி, கலை, பணி மலர வேண்டும். வரலாறு, மொழியின், எழுத்தின்-எண்ணின்-இலக்கணத்தின் படிவளர்ச்சி, கட்டடத் துறை, ஓவிய சிற்ப படிமக்கலை, இவற்றுடன் இயைந்த கோணிலை, ஒளிநூல், ஆகமம், உருப்பா (தியான சுலோகம்) முதலியவற்றை முறைப்படி கற்பித்து வருங்காலத்தில் இத்துறை அறிவு வளம் பெறச் செய்யும் பயிற்சித்துறை மலர அன்னையவள் அருளை வேண்டுவோம்.

இந்த உணர்ச்சியை ஊட்டி, ஆர்வத்தை உண்டாக்கி, ஈடுபாட்டை கொளச் செய்தவன் கவிச்சக்கரவர்த்தி கம்பனே! ''இவன் இசைகள் கூரக் கல்லாத கலையும், வேதக் கடலும் உலகத்து எங்கும் இல்லாத!'' என்று சொல்லுமாப் போலே கல்வியிற் பெரியனாய்ப் பிறங்குகின்றான் கம்பன். ''என்னையுமே தன்னடியனாய்க் கொண்டு, கன்னித் தமிழ்ப் பணிக்கு என்னைக் கை காட்டி விட்ட அன்னவன் அடித்துகளே அடியனேன் சென்னிக் கணி!'' என நாளும் மகிழ்வேன்.''

நாங்கள் எதையும் புதிதாகச் சொல்ல விரும்பவில்லை. ஒன்றரை மாமாங்க காலமாகியும் இந்தச் சொற்கள் தமிழன்பர்கள் தமிழக அரசு இவர்கள் காதில் ஒலித்துபயன் சுரந்தால், அதுவே இப் பொன்விழாவின் மிகப்பெரிய பலனாகும். ஆனானப்பட்ட பாரத மாதாவே அடிமை விலங்கை அறுத்தெறிய அத்தனை ஆண்டுக் காலம் தவமிருந்தபோது, 'என்னையிவள் காலம் என யாரும் கணிக்க ஒணா' தமிழ்த்தாய் ஒரு மாமாங்கம் (1976ல் தமிழ்த் தாய் கோயில் கால் கோள் நடைபெற்றது) காலம் தவமிருந்திருக்கிறாள்.

எந்தை பிரான் கம்பன் ஓர் உலக மகாகவி என்பதும், கவிச்சக்கரவர்த்தி என்பதும் சத்திய வாக்கானுல் தமிழ்த்தாய் கண் திறக்கட்டும்; கம்பனுக்காகவும் கன்னித் தமிழுக்காகவும் தன்னையே அர்ப்பணித்துக் கொண்டே அப் புனித ஆத்மாவின் ஆசை நிறைவேறட்டும்.

உங்கள் அன்பும்
பணிவுமுள்ள

கம்பன் கழகம்
கம்பன் மணி மண்டபம்
காரைக்குடி
30-3-88

மு. மெ. முத்துராமன்
கம்பன் அடிசூடி
செயலாளர்

பின் குறிப்பு:

மேற்கண்ட கடைசிப் பாராவை எழுதி அச்சடித்த பிறகு எங்கட்குக் கிடைத்தது இனிப்பான செய்தி. ஆம்; மகாகவி, 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே ஆனந்த சுதந்திரம் அடைந்தோம்' என்று முழக்கமிட்டதும், சுதந்திரம் கிடைத்ததுபோல், தமிழ்த்தாயும் கம்பனும் 'கோயில்' என்றே தமிழர்கள் சிறப்பிக்கும் 'சிதம்பரம்' பேரில் புகுந்து, தமிழக அரசு மணிமண்டபப் பணி—தமிழ்த் தாய் திருப்பணி இரண்டையும் நிறைவேற்ற உள்ளது என்ற சேதி வந்துள்ளது. 'சிதம்பரம்' இருக்கும் திக்கு நோக்கித் தொழுகிறோம். எங்கள் கண்களை ஆனந்தக் கண்ணீர் மறைக்கிறது. இனி என்ன எழுதுவது? எல்லாம் கம்பன் செயல்!

# கம்பன் கழக உறுப்பினர்கள்



*தலைவர்:*

திரு. ஜி. கே. சுந்தரம்

*உபதலைவர்:*

திரு. க. கு. கோதண்டராமன்

*செயலாளர்:*

திரு. மு. மெ. முத்துராமன், கம்பன் அடிகுடி

*உதவிச்செயலாளர்:*

திரு. ச. கம்பராமன்

*பொருளாளர்:*

திரு. அள. திருநாவுக்கரசு

*உறுப்பினர்கள்:*

திருவாளர்கள்

1. மெ. செ. மெ. மெ. சொக்கலிங்கம் செட்டியார், காரைக்குடி
2. ச.நா.அ.சொ.அ. அண்ணாமலை செட்டியார், காரைக்குடி
3. என். ஏ. மாரிமுத்து பிள்ளை காரைக்குடி
4. ராம. கண்ணப்பன் நாட்டரசன்கோட்டை
5. மு. சிதம்பரம், காரைக்குடி
6. எம். எஸ். சுந்தரம் பிள்ளை பாளையங்கோட்டை
7. ந. கோவிந்தசாமி, புதுவை
8. ஆர். கே. சுப்பிரமணியன் காரைக்குடி
9. பெ. மு. சுப்பையா செட்டியார் ஆத்தங்குடி
10. பழ. சண்முகம், காரைக்குடி
11. நா. மெய்யப்பன், காரைக்குடி
12. அரு. நாகப்பன், ஒ. சிறுவயல்
13. அள. சுப்பையா, காரைக்குடி
14. அள. வீரப்பன், காரைக்குடி
15. ராம. தெ. முருகப்பன், காரைக்குடி
16. ப.மு.சித. பழநியப்பன், காரைக்குடி
17. எஸ். ஏகப்பன் நாட்டரசன்கோட்டை
18. ராம. சொக்கலிங்கம், காரைக்குடி
19. ப.சு.ராம. அண்ணாமலை செட்டியார், காரைக்குடி
20. சுப. சித. சுப்பிரமணியன் காரைக்குடி
21. ஆ. ம. ஸ்ரீதரன், இரகுநாதபுரம்
22. சா. நா. நாராயணன், காரைக்குடி
23. பழ. முத்தையா, காரைக்குடி
24. வெ. பழநியப்பன், காரைக்குடி
25. எஸ். முனுசாமி, காரைக்குடி
26. அரு. லெட்சுமணன், காரைக்குடி
27. நா. பழனியப்பன், காரைக்குடி
28. லெ. கணேசன், காரைக்குடி
29. கலைமகள் ராமனாதன், கோவை
30. மெ. காந்தி, காரைக்குடி
31. சரசுவதி இராமநாதன், பள்ளத்தூர்
32. அ. கிருஷ்ணசாமி, கோவை
33. வை. கண்ணுச்சாமி, தஞ்சை
34. சித. ஆதப்பன், வடலூர்
35. பி. மூக்கையா ஆசாரி காரைக்குடி
36. வெ. அருணசலம், மலாக்கா
37. [illegible]

# மலர்க் குழு

*தலைவர்:*

**டாக்டர் எம். ஏ. எம். இராமசாமி**

*செயலாளர்:*

**திரு மு. மெ. முத்துராமன்**

*பொருளாளர்:*

**திரு அள. திருநாவுக்கரசு**

*துணைச் செயலாளர்:*

**திரு ச. கம்பராமன்**

**உறுப்பினர்கள்:**

பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன்

திரு ச. மெய்யப்பன்

திரு எம். எஸ். சுந்தரம்பிள்ளை

திரு என். கோவிந்தசாமி

திரு ஏவி. எம். சரவணன்

திரு ராம. அருணசலம்

திரு கேஎல். இராமநாதன்

திரு எல். சபாரத்தினம்

திரு வானதி திருநாவுக்கரசு

திரு ஏஆர். இராமசாமி

திரு ஆர்எம். ரெங்கநாதன் செட்டியார்

''முன்னமருட் கம்பனெனும் நாமம் கேட்டான்
மூர்த்தியவன் இராமகாதை முழுதும் கேட்டான்
பின்னருள்ள சான்றோர்கள் பேசக் கேட்டான்
பேர்த்துமவன் சேவடிக்கே பிச்சன் ஆனான்

அன்னையுடன் அத்தனுமே கம்ப னென்றான்
அவன்பெயராய்த் தன்பெயரை ஆக்கிக் கொண்டான்
தன்னைமறந் திட்டான்தன் நாமம் கெட்டான்
தலைப்பட்டான் சேர்ந்திட்டான் தலைவன் தாளே.''

— *கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரம்*

"நின்னை வணங்கி, நீவகுத்த நெறியில் நிற்கும் இதுஅல்லால்
என்னை அடியோம் செயற்பால?"



"நின்னாவார் பிறரன்றி நீயே ஆனாய்;
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்து மானாய்"

*"Who can say more than this rich praise that you alone are you?"*

त्वमेव माता च पिता त्वमेव,
त्वमेव बन्धुश्च सखा त्वमेव,
त्वमेव विद्या द्रविणं त्वमेव,
त्वमेव सर्वं मम देव देव ।।



திரு. ஜி. கே. சுந்தரம்

தலைவர், கம்பன் அறநிலை & கம்பன் கழகம்



திரு. மு. மெ. முத்துராமன்
நிர்வாக அறங்காவலர் — கம்பன் அறநிலை
செயலாளர் — கம்பன் கழகம்



டாக்டர் எம். ஏ. எம். இராமசாமி

பொன்விழா மலர்க் குழுத் தலைவர்



திரு. அழ. திருநாவுக்கரசு
பொருளாளர்
கம்பன் அறநிலை & கம்பன் கழகம்



திரு. ச. கம்பராமன்
உதவிச் செயலாளர், கம்பன் கழகம்
அறங்காவலர், கம்பன் அறநிலை




भारत के उप-राष्ट्रपति के निजी सचिव
नई दिल्ली

PRIVATE SECRETARY
TO THE VICE-PRESIDENT OF INDIA
NEW DELHI

January 30, 1988

Dear Shri Palaniappan,

Please refer to your letter of 28th January, 1988 addressed to the Vice-President of India informing him that the Kamban Kazhagam, Karaikudi is celebrating its Golden Jubilee this year.

The Vice-President sends his best wishes for the success of the Golden Jubilee Celebrations.

Yours sincerely,
S. W. MALWADE



प्रधान मंत्री कार्यालय
नई दिल्ली 110 011
PRIME MINISTER'S OFFICE
NEW DELHI 110 011
5-2-88

Dear Shri Palaniappan

''The Prime Minister sends his good wishes to the Kamban Kazhagam, Karaikudi on the occasion of its Golden Jubilee being celebrated this year.''

Yours sincerely,
(Sd.) PULOK CHATTERJI




गृह राज्य मंत्री
भारत
MINISTER OF STATE, HOME
INDIA

பிப்ரவரி 25, 1988

அன்புள்ள திரு. பழநியப்பன் அவர்களுக்கு,

காரைக்குடி என்றாலே கம்பனை மனத்திரையில் கொணர்ந்து நிறுத்திடும் வகையில் கடந்த அரை நூற்றாண்டாக கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்த்து வருகிறது காரைக்குடி கம்பன் கழகம்.

முப்பெரும் புலவருள் முதற்பெரும் புலவனாய் பாரதி போற்றி நின்ற கவிச்சக்கரவர்த்தி கம்பன், எத்தரப்பினரும் எக்காலும் பின் பற்றிடுகின்ற வகையில் உயரிய நெறிகளைச் சொன்னவன். அத்தகைய கவிஞனின் புகழுக்கு மெருகேற்றிடுகின்ற வகையில் தன்னை முழுமையாக அர்ப்பணித்து உழைத்திட்ட, மறைந்த திரு. சா. கணேசன் அவர்களுக்கு நாம் மிகுந்த நன்றிக் கடன் பட்டுள்ளோம். அவரது வழியொற்றி இப்பணியினைத் தொடர்ந்து வரும் கம்பன் கழக நிர்வாகிகளைப் பாராட்டுவதில்-வாழ்த்துவதில் பரவசமடைகிறேன்.

இக்கழகத்தின் பணி தொடர்ந்திடவும் பொன்விழா மலர் பொலிவு பெற்றிடவும் எனது நெஞ்சம் நிறைந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்,

ப. சிதம்பரம்

உ

சிவசிவ

கயிலைமா முனிவர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அதிபர், ஸ்ரீ காசிமடம்

திருப்பனந்தாள்— 612504
(தஞ்சை மாவட்டம்)

தேதி: 9-2-1988

திரு. பழ. பழனியப்பன் அவர்கட்குச் செந்திலாண்டவன் திருவருள் முன்னிற்க.

காரைக்குடியில் கம்பன் விழா இந்த ஆண்டு பொன்விழாக் காணுகிறது என்ற செய்தி மிக்க மகிழ்ச்சியைத் தருகிறது. ஐம்பது ஆண்டுகள் தொடர்ந்து ஒரு தமிழ்க் கவிஞனின் விழா நடைபெறுகிறது என்பது புது வரலாறாகும். இந்த வரலாறு படைத்த கம்பன் அடிப்பொடி அவர்கள், இந்த வரலாறு படைக்க எவ்வளவு இன்னல்களையும் சிரமங்களையும் ஏற்றிருப்பார் என்பதையும் இதுபோது சிந்தித்தல் தகும். கம்பன் காவியம் உள்ளளவும் அவர் பெயர் நிலைத்திருக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

உணர்ச்சி பூர்வமான இயக்கங்களை உண்டாக்கிச் சிலபல ஆண்டுகள் நடத்தித் தலைமைபெறும் செயல் எளிமையானதாகும். ஆனால் இத்தகு உணர்வு பூர்வமான இலக்கிய இயக்கத்தைத் தொடங்கி அதனை நிலைப்படுத்தித் தனக்குப் பின்னரும் அது தழைக்குமாறு வழிவகுத்த கம்பன் அடிப்பொடி அவர்கள் வியப்புக்குரிய சாதனை மனிதராவார்.

பலதுறைப் புலமையும், பண்பும், அடக்கமும், கொண்ட அவர் தம் படைப்புக்களும், வாழ்வும் இன்றைய இலக்கியவாதிகட்கும், இளைஞர்கட்கும் வழிகாட்டுவனவாகுக.

காரைக்குடி கம்பன் கழகப் பொன்விழா மலர் திரு. கம்பன் அடிப்பொடி அவர்களின் கருத்துக் கருவூலங்கள் செறிந்ததாகவும், அறிஞர் பெருமக்கள் பலரின் அரிய படையல்கள் தாங்கியதாகவும் விளங்கி, கம்பன் காவியம் போலவே கற்போர்க்கு இதயம் நிறைவிப்பதாகுக எனவும் இந்நன் முயற்சியில் ஈடுற்ற அன்பர்கட்கு நலமும் வளமும் நனிமிகப் பல்குவதாகுக எனவும் எல்லாம்வல்ல செந்திநகர் மேய செல்வன் திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சுபம்

சிவ சிவ

# கோவிலூர் மடாலயம் ஆண்டவர் மன்றம்

(பதிவு எண். S. 35 of 1972)

தந்தி நிலையம்: காரைக்குடி
தொலைபேசி எண்:
காரைக்குடி-2646

கோவிலூர் B. O.
(காரைக்குடி வழி)
பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம்

11-1-1988

வித்தக விநாயகன் மெய்யடி போற்றி
நம் வினையெல்லாம் களைந்த வேலவனடி போற்றி
அன்போடு அணைக்கும் அன்னையின் அடிபோற்றி
அருளெலாம் வழங்கும் ஆண்டவன் திருவடி போற்றி

கம்பன் கழகம் கண்டு, கன்னித் தமிழ் வளர்த்த கணேசனுர் அயரா உழைப்பால் ஆல் விருக்ஷம் போல் வளர்ந்து பொன் விழா காண உள்ள கம்பன் கழகம் யாம் வணங்கும் கொற்றவாள் ஈஸ்வரர் திருநெல்லை தாயின் திரு அருளால் மெய்ஞானிகள் உள்ளத்தில் உதிக்கின்ற உயர்வு போல் வளம் பெற்று வாழ்வாங்கு வாழ வாழ்த்துகின்றேம்.

உலகத் தீமையெல்லாம் நீங்கி திக்கெல்லாம் அன்பருள் பரவி திடமுள்ள மக்களாய் வாழ வாழ்த்துகின்றேம்.

கொற்றவாளீஸ்வரர் திருநெல்லையின் திருஅருள்.

## பொன் விழா ஆண்டையொட்டி

### பாராட்டப் பெறும் அறிஞர் பெருந்தகைகள்

திரு. கி. வா. ஜகந்நாதன்

திரு. கி. பக்ஷிராஜன்

திரு. கு. அருணாசலக் கவுண்டர்

திரு. அ. ச. ஞானசம்பந்தன்

திரு. மு. மு. இஸ்மாயீல்

திரு. எஸ். இராமகிருஷ்ணன்

திரு. க. கு. கோதண்டராம கவுண்டர்

திரு. எஸ். கே. இராமராஜன்

### தொண்டர் பெருமக்கள்

திரு. பெ. மு. சுப்பையா செட்டியார்

திரு. மெ. நா. சித. சிதம்பரம்

திரு. மு. மெ. முத்துராமன்

திரு. இராம. சிதம்பரம்

'கம்பன் அடிப்பொடி'

# திருத்தசாங்கம்

கவிஞர் கோ திரு.' பூ. அமிர்தலிங்கன்

### பெயர்

கற்பகப்பூஞ் சோலைக்கண் கம்பன் அடிப்பொடியாய்
அற்புதங்கள் செய்த அவர்பெயர்என்?—நற்கிளியே
கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ்வளர்த்த
நம்பன் கணேசன் என்றே நாட்டு. (1)

### நாடு

நாட்டுத் திருத்தொண்டே நாடும் கணேசர்தம்
நாட்டின் பெயரை நவில்வாயோ?—பாட்டிலுயர்
சங்கத் தமிழ்வளர்த்த தண்பாண்டி நாடு என்றே
தங்க மணிக்கிளியே சாற்று. (2)

### ஊர்

சாற்றுங் கணேசனார் தாம்பிறந்த ஊரதனை
ஏற்றமுறுங் கிள்ளாய் இயம்பிடுவாய்!—தேற்றமுடன்
பாரதியார் போற்றும் பழஞ்சங்கம் வாழ்ந்தோங்கும்
காரைக் குடியெனவே காட்டு. (3)

### மலை

காரார்ந்த மேனிக் கணேசர் மலையெதுவோ?
சீரார் இளங்கிளியே செப்பிடுக!—பாரோர்
கருதும் அருள்ஞானக் கற்பகத்தை ஈன்ற
மருதீசர் வாழும் மலை. (4)

### ஆறு

மலைமேல் எழுத்தை மதிநுட்பால் ஆயும்
கலையறிந்த எங்கள் கணேசர்—நிலையாக
ஆடும் திருநதிதான் அன்பார் ஒழுக்கம் எனக்
கூடும் பசுங்கிளியே! கூறு. (5)

## ஊர்தி

சூர்த்த மதியாலே கோவில்வாழ் சிற்பத்தின்
கீர்த்தியெலாம் காட்டும் திறனுளி—ஊர்த்தொண்டே
நல்லூர்தி யாக நயஞ்செய்த காராளர்
வல்லமையை அஞ்சுகமே வாழ்த்து. (6)

## படை

அஞ்சாத நெஞ்சன் அருங்காந்தி கைக்கொண்ட
எஞ்சாத சத்தியமே ஏர்படையா—மிஞ்சிவரும்
மாற்றுரை வென்று மதிக்கும் அடிப்பொடியைப்
போற்றுகவே கிள்ளாய் நீ போந்து. (7)

## முரசு

போர்முரசம் இன்றிப் புலவர் தமையெல்லாம்
ஆர்வக் கவிமுரசால் ஆட்கொண்டு—பார்புகழும்
கம்பன் அடிப்பொடியாய்க் கன்னித் தமிழ்வளர்த்த
செம்மையினைப் பைங்கிளியே! செப்பு. (8)

## தார்

செப்பும் மரகதமே! சீர்த்திக் கணேசர்தம்
ஒப்பில்லாச் செந்தார் உரைப்பாயோ?—எப்போதும்
செம்மை உருத்திராக்கச் சீர்சால் மணிமாலை
தம்மார்பில் ஏற்றார் தழைத்து. (9)

## கொடி

துங்கக் கதராடை தோளில் துலங்கிவர
எங்கும் தமிழ்க்கொடியை ஏற்றுவித்துப்—பொங்கிமகிழ்
பொற்புக் கணேசர் புகழ்பாடும் பூங்கிளியே!
கற்பகத்தைச் சேர்வாய் களித்து. (10)

# அறிவுடைமை

நீதிபதி டாக்டர் மு. மு. இஸ்மாயீல்

அறிவு, உணர்ச்சி என இரு கூறாகப் பகுத்துப் பேசுவதும் எழுதுவதும் நம் வழக்கம். ஆனால், அவற்றின் இலக்கணம் எவை, எவை என நிர்ணயிப்பது கடினம். இப்படி வரையறுத்து நிர்ணயிப்பது கடினமாயினும், ஒரு மனிதனுடைய சொல்லிலும், செயலிலும் எப்பொழுது, எங்கு அறிவு செயற்படுகிறது, உணர்ச்சி ஆட்கொள்கிறது என்பதனைப் புரிந்து கொள்ள முடிகிறது.

இலக்கண நூல்களோ, நிகண்டுகளோ இப்படி வேறுபடுத்திக் காட்டுவதுமில்லை. எடுத்துக் காட்டாக பிங்கல நிகண்டு,

உணர்வு, காட்சி, உரனே, மேதை
தெளிவு, புலனே
தெருட்சி, போதம், ஞானம், அறிவு
எனப் புகல்வர்

எனக் கூறும். —6766

இதன்படி உணர்வு முதலாக, ஞானம் ஈறாக குறிப்பிடப் பெறும் ஒன்பதும் அறிவு என்று ஆகிறது.

திவாகர நிகண்டும் அறிவு என்ற சொல்லும், கல்வி என்ற சொல்லும் ஒன்றே எனக் குறிப்பிடுகிறது.

இதனைச் சென்னைப் பல்கலைக்கழகம் பதிப்பித்துள்ள Lexicon-I. Vol. எடுத்துக் காட்டுகிறது.

இவற்றோடன்றி அது மேலும் ஞானம், புத்தி, பொறியுணர்வு, ஆன்மா, அறிய வேண்டியவை என்பவையும் அறிவு என்ற சொல்லால் குறிப்பிடப்பெறும் என்றும் எடுத்துக் காட்டுகிறது.

'புத்தி' என்பதனை உள்ளடக்கியது அறிவு என்ற சொல் என்பதற்கு எடுத்துக் காட்டாக,

எதிரதாக காக்கும் அறிவினோர்க்
கில்லை
அதிர வருவதோர் நோய்
—திருக்குறள் 429

எனும் குறட்பாவை குறிப்பிடுகிறது. இங்கு அறிவு, புத்தி எனப் பொருள்படும் என்றமைகிறது.

அது போலவே 'அறிய வேண்டுவன' என்ற பொருட் செறிவினை—அறிவு என்ற சொல் உள்ளடக்கியது என்று எடுத்துக்காட்ட,

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை
அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற
—திருக்குறள்-61

என்ற பாவினைப் பயில்கிறது. இவ்விடத்து அறிவது என்ற சொல்லாட்சி அறிய வேண்டுவன என்ற பொருள் தருகிறது என்னும்.

'ஆன்மா' என்பதனை அறிவு என்ற சொல் குறிப்பிடும் எனக் காட்ட ஞானாமிர்த நூல் தொடர் ஒன்று தருகிறது. அது:

அறிவு உருவு அதனோடு
அறித்தம் அன்மையின் (44,45)

என்பதாம்.

இது போலவே கம்பனும் தன் காப்பியத்தில் "அறிவு" என்ற சொல்லை "உணர்தல்" என்ற பொருளில், பல்வேறு இடங்களில் பயின் றிருக்கின்றான்.

ஆனால் ஒன்று: நாம் அன்றாட வாழ்க் கையில் காண்பது; அதுதான் சிற்சில கட்டங்களில் அறிவு உணர்ச்சியில் ஆழ்வது.

நம் அனுபவத்தில் காணும் ஒன்று: சில ரைப் பார்த்த மாத்திரத்திலேயே அவரிடத் தில் நமக்கு ஓர் அழுத்தமான ஆழ்ந்த அன்பும் பாசமும் உண்டாகி விடுகிறது. அது போலவே, வேறு சிலரைக் கண்ட மாத்திரத் திலேயே, அவர்களிடத்து நமக்கு ஒரு வகை யான வெறுப்புணர்ச்சியே மேலிடுகிறது.

இப்படி உண்டாவது ஏன்? இதற்கான வற்றை காரண காரியத்தோடு சிந்தித்துப் பார்ப்பவர் சிலரே. அப்படிச் சிந்தித்துப் பார்த்தால் முற்குறிப்பிட்டவரிடத்தில், நமக்கு நெருக்கமானதாக இருக்க வேண்டும் என்று வேணவா கொண்டிருக்கிற சில அம்சங்கள் இருத்தல் காரணமாக அமைதல் கூடும். அது போலவே, மற்றையோரிடத்து, நம்மோடு பகைமை பாராட்டும் ஒருவரையோ நாம் வேண்டாதன, வெறுக்கத் தக்கவை என்று கொண்டிருக்கிற அம்சங்கள் உடையவரையோ, நினைவுபடுத்தும் நிலை இருக்கலாம்.

எடுத்த எடுப்பிலேயே செயற்படுவது உணர்ச்சி. ஏன் அத்தகைய உணர்ச்சி உண் டாயிற்று என்று ஆய்ந்து, ஆழமாகச் சிந்திப் பதன் காரணமாக ஒரு முடிவுக்கு வருவது அறிவு.

இங்கும் கூட பின்னர் ஆழமாகச் சிந்தித்துப் பார்க்குமிடத்து இரண்டிடத்தி லுமே நாம் தவறு செய்து விட்டோமே என்று உணர்ந்து தன்விரக்கம் கொள்வதற் கும் வாய்ப்பு உண்டு. இத்தகு அனுபவத்திற் கும் நிறைய இடமிருக்கிறது.

நாளடைவில், இத்தகையவனையா நாம் கண்ட அளவில் காமுற்றோம் என்று எண் ணும் நிகழ்ச்சிகளும், இத்துணை நல்ல வனையா நாம் வெறுத்து விலக்கினோம், விலகினோம் என்று தன் கடந்த கால செயல் களுக்காகக் கழிவிரக்கம் கொள்ளும் அனு பவமும் இருக்கத்தான் செய்கின்றன.

எனவே, பொதுவாக உணர்ச்சி என்பது உட னேயே உந்தி எழுவது; அறிவு என்பது ஆய்ந்து சிந்தித்ததன் பயனாக ஒரு முடிவுக்கு வரு வது என்று சொல்லி விடலாம்.

இதற்குக் கம்பனிலேயே இரு மேற்கோள் களைக் காணலாம். இவ்விரண்டுமே இங்கு நாம் ஆய்ந்து கொண்டிருக்கும் கருத்துக்கு அரண் செய்பவை.

இழந்த சீதையைத் தேடிய இராம இலக்கு வர்கள், கபந்தனும், சபரியும் காட்டிய வழி நடந்து, சுக்கிரீவன் நட்பைப் பெற விரும் பியவர்களாய்ப் பம்பைப் பொய்கையைக் கடந்து வருகிறார்கள்.

ரிஸ்யமுக பர்வதத்தில் தன் உயிர்த்துணை வருடன் கூடி இருந்த சுக்கிரீவன், வரும் அவர் கள், வாலியின் ஏவலர் என்றும், தன்னைப் பற்றி அறியவே வருகின்றனர் என்றும், தவறா கக் கருதி, அஞ்சி ஓடி ஒளிய முயல்கிறான்.

அப்பொழுது அநுமன் 'அவர்களைக் கண் டால் தெய்வீக புருஷர்களாகத் தோன்று கிறது, எனவே அவர்க்காக நீங்கள் அஞ்ச வேண்டா, நானே சென்று உண்மையை அறிந்து வருகிறேன்' என்று கூறி மாணியாம் படிவம் எய்தி மற்று அவர் பக்கம் சார்கிறான்.

அண்மையில் அவர்களைக் காணும்பொழுது அவன் மனம் தன்னை அறியாமலேயே அவர் கள் பால் ஈடுபாடு கொண்டு விடுகிறது. இத னைக் கம்பன் அநுமன் வாயிலாய்,

துன்பினைத் துடைத்து மாயத் தொல்
வினை தன்னை நீக்கி
தென்புலத்து அன்றி மீளா நெறி
உய்க்கும் தேவரோ தாம்?
என்பு எனக்கு உருகுகின்றது; இவர்
கின்றது அளவில் காதல்;
அன்பினுக்கு அவதி இல்லை; அடைவு
என் கொல்? அறிதல் தேற்றேன்.
—3763

என்று குறிப்பிட்டு விடுகிறான்.

எனினும், பின்னர்தான் தனக்கு இவ்வாறு அவர்கள்பால் அன்பு உண்டாவதற்கு அமைந்த காரணம் இவை என அவர்களு டைய வலிமை பற்றிச் சுக்கிரீவனிடத்து தெளியக் கூறும்போது குறிப்பிடுகிறான்.

பகைவர் அல்லர்; நட்டலுக்குரியவரே என்று தெளிவுபடுத்தி, ஐயம் அகற்றி, அவ் விருவருள் ஒருவன் திருமாலே என்று குறிப் பிடுகிறான்.

தான் அம்முடிவிற்கு வரக் காரணம் தன் தந்தையார் தன்னிடம் கூறிய ஒன்று என்றே புகல்கிறான்.

'என்னை ஈன்றவன்,
''இவ்வுலகு யாவையும் ஈன்றான்-
தன்னை ஈன்றவற்கு அடிமை செய்;
தவம் உனக்கு அஃதே;
உன்னை ஈன்ற எற்கு உறு பதம் உளது''
என உரைத்தான்;
இன்ன தோன்றலே அவன்;
இதற்கு ஏது உண்டு;—இறையோய்!
'துன்பு தோன்றிய பொழுது,
உடன் தோன்றுவன்: ''எவர்க்கும்
முன்பு தோன்றலை அறிதற்கு முடிவு என்?''
என்று இயம்ப,
''அன்பு சான்று'' என உரைத்தனன்; ஐய!
என் ஆக்கை,
என்பு தோன்றல உருகின.........
—*3861, 62*

இவ்வாறு உணர்ச்சி ஓங்கி நிற்கும் கட்டங்களையும், அறிவுச் செறிவு விளக்கம்பெறும் இடங்களையும் கம்பன் தன் பார காவியத்தில் காட்டி நிற்கிறான்.

மற்றையது வீடணனைப் பற்றியது.

சீதையைத் தேடி இலங்கைக்குச் சென்ற அநுமன் ஒவ்வொரு இடமாக, ஒவ்வொரு மாளிகையாகவும் புகுந்து தேடிப் பார்த்துக் கொண்டு வருகிறான். அப்படிச் செய்யும் பொழுது வீடணன் மாளிகையில் புகுகின்றான்.

அவ்வீடணனை

வேந்தர், வேதியர், மேல் உளோர், கீழ்
உளோர் விரும்பப்
போந்த புண்ணியன். —*4969*
என்று குறிப்பிடுவான்.

அங்கே வீடணன் உறங்கிக் கொண்டிருப்பதனைக் காண்கிறான். கவிஞன் இவ்விடத்து வீடணன் குறித்து

'தருமம் அன்னான்'
—*4970*

என்பான்.

அடுத்து வரும் பாடலின் முதலடிதான் நாம் நோக்கிக் கொண்டிருக்கும் கருத்தினுக்குப் பொருந்துவது.

அவ்வடி,
உற்று நின்று, அவன் உணர்வினைத்
தன் உணர்வினால் உணர்ந்தான்;
—*4971*

என்பதாம்
அப்படி உணர்ந்ததன் பலனே,
'குற்றம் இல்லதோர் குணத்தினன் இவன்'
—*4971*

என்று அவன் கொண்ட முடிபு ஆகும்.

உண்மையில் அநுமன் வீடணனை முன்னதாக அறிந்தவன் அல்லன். இப்பொழுது தான் முதன் முறையாகப் பார்க்கிறான். அப்படிப் பார்க்கும் பொழுதே வீடணனுடைய இயல்பை, அதாவது உணர்வைத் தன் உணர்வினால் உணர்ந்து எடை போட்டு விடுகிறான்.

கவிச்சக்கரவர்த்தி மிக்க கவனத்துடன் உணர்வு என்ற பெயர்ச் சொல்லையும், உணர்ந்தான் என்று அதன் வினையையும் இங்கே ஆள்கிறான்.

அதன் பலன் ஓர் அற்புதமான செய்யுள் அணி கிடைக்கிறது.

உணர்வினால் இம்முடிவிற்கு அநுமன் வந்ததை அறிவின் அடிப்படையில் பின்னர் வீடணன் அடைக்கலப் படலத்தில் எடுத்துக் கூறுகிறான்.

'குற்றம் இல்லதோர் குணத்தினன் இவன்' என முன்னர், கண்ட மாத்திரத்துக் கொண்ட முடிவு, உணர்ச்சியின் அடிப்படையில் எழுந்தது.

வீடணன் அடைக்கலப் படலத்தில் தன்னுடைய அந்த முடிவிற்கான காரணங்களை அறிவின் அடிப்படையில் நிரல் படுத்திச் சொல்கிறான்.

தன்னை (அநுமன்)க் கொல்லுமாறு இராவணன் ஆணையிட்டபொழுது

தூதரை எறிதல் என்பது புல்லிது;
பழியொடும் புணரும்;
—*6458*
என்றும் இராவணனுக்கு அறிவுரை கூறியதனை நினைவு கூர்கிறான்.
அழிவு செய்யினும் தூதரைக்
கோறலும், தூய்து அன்றும்'
—*6459*
என்றும் கூறியதனை எண்ணுகிறான். இவ்விரண்டு குறித்தும் இராமனிடம் கூறிதான் முன் இலங்கையில் வீடணன் மாளிகை

யில் நறவம் ஊன் ஆயவற்றைக் காணவில்லை என்றும் குறிப்பிடுகிறான்.

நிந்தனை நறவமும், நெறி இல் ஊன்களும்,
தந்தன கண்டிலேன்; தரும தானமும்,
வந்தனை நீதியும், பிறவும்,
மாண்பு அமைந்து,
அந்தணர் மனை எனப் பொலிந்தது.
—6461

என்றும், அவ்விடணன் மகளாகிய திரிசடையே சிதையிடத்து

......அலரின் மேல் அயன்,
சொன்னது ஓர் சாபம் உண்டு: உன்னைத்
துன்மதி,
நன்னுதல்! தீண்டுமேல், நணுகும் கூற்று.
—6462

என்று ஆறுதல் கூறியதனையும் எடுத்து இயம்புகிறான்.

இவ்வாறான செய்திகளை எடுத்துக்காட்டலின் வாயிலாய், தான் தன் உணர்வினால் உணர்ந்ததை மெய்ப்பிக்கிறான்; நியாயப் படுத்துகிறான்.

இவ்வாறான கட்டங்கள் பலஉள.

தம்மவர் தவிர்த்து தகு துணைவர் நால்வருடன் விடணன் இராமனிடம் புகல் புகுகிறான். இராமனும் அவனைத் தன்னவன் ஆகவே கொள்கிறான்.

பின் இராமன் தனிமை நாடி ஏவரும் உடன் இல்லாதிருக்க, செவ்வந்தி மாலைப் பொழுதில் அச் சிவந்த வாய்ச் சிதையை நீடு நினைந்து வருந்துகிறான்.

மெல்ல அவ்விடம் சேர்ந்த சுக்கிரீவன் 'விடணனோடு கலந்து மேல் விளைவது குறித்து எண்ணுக' எனக் கூறுகிறான்.

அவ்வுரையாடலின் பொழுது விடணன் இராமற்கு இலங்கையின் அரண் பற்றியும், இராவணன் குறித்தும், தம்பி குறித்தும் துணை நிற்கும் சேனைத் தலைவர் பற்றியும், புதல்வர் பற்றியும், அவர் தம் ஆற்றலில் விளைந்தன யாவையும் எஞ்சலின்றி எடுத்துக் கூறுகிறான்.

சிதையைத் தேடி இலங்கை புக்க அனுமன், காட்டுவார் இன்மையின் கடிநகர்க்காவினை எரி மடுத்ததும், தடுத்தார் துவைத்ததும் தீதின்றிப் போனதும் கூறி, எரி கொளுவப் பெற்று பொலிவற்றுப்போன நகரத்தை அயன் துணை கொண்டு மயன் மருமகன் புதிப்பித்ததனையும் குறிப்பிடுகிறான்.

இவ்வாறு சொல்லிக் கொண்டு வந்த விடணன், ஒரு பாடலில் தான் இராமனைச் சரண் புக நேர்ந்ததற்கான காரணங்களைக் குறிப்பாகச் சொல்லுகிறான். அப்பாடல்தான்,

காந்தும் வாளியின் கரன் முதல் வீரரும்,
கவியின்
வேந்தும், என்று இவர் விளிந்தவா
கேட்டு அன்று; அவ்இலங்கை
தீந்தவா கண்டும், அரக்கரைச் செருவிடை
முருக்கிப்
போந்தவா கண்டும், நான் இங்கு
புகுந்தது—புகழோய்!''
—6583

என்பதாம்.

இப்பாடலின் பிழிவு பின்வருமாறு: ''ஐய! நான் நின்னைச் சார்ந்தது சினம் கொண்டு நீ துரந்த சுடு வெங்கணைகளால் கரனும், சார்ந்தோரும், கவிக்குலக் கோமகன் வாலியும் சாய்ந்து, மாய்ந்தனர் என்பதனால் அன்று.

நின் தூதுவனாய் எம் நெடுநகர் போந்து, தன் வால் வைத்த தீயினை மாளிகை மேல் வைத்து எரித்து நீறாக்கி, எதிர்ந்தாரைப் பொன்றுவித்து நின்பால் நன்றே போந்த அனுமன் ஆற்றிய வீரச் செயல்களைக் கண்டே, நான் இங்கு நின்பால் அடைக்கலம் புக்கது.''

இப்பாடலை மேல் எழுந்த வாரியாகப் படிப்பவர்களுக்கு விடணன் இராமன் ஆற்றலைக் குறைத்துக் கூறுவது போலும், அனுமன் திறலை வானளாவப் புகழ்வது போலும் தோன்றும்.

எவனிடத்துத் தனக்குப் புகல் வேண்டும் என்று தேடிப் பெற்றவனு, தனக்கு அடைக்கலம் தந்த அந்த பெருமகனிடம் இவ்வாறு பேசுகிறான் என்று வியக்கத் தோன்றும்.

உணர்வு வயப்படாது உற்று நோக்கினால் இப்பாடலில் விடணனுடைய அறிவுத் திறன் பளிச்சிட்டுப் பொலிவதை உணரலும், காண்டலும் ஒருங்கு இயையும்.

உரன் மிக்க கரன், வரன் மிக்க வாலி போல்வார் இராமனால் கொல்லப் பட்டதை விட

ணன் குறிப்பிடுகிறான். அவர்கள் அவ்வாறு கொல்லப்பட்டனர் என்பதனைக் கேட்ட றிந்தவனே அன்றி கண்டிலன்.

மாறாக தூது போந்த அனுமன், துணை வேண்டாது செருவில் வென்றதை, கிங்கரர், பஞ்ச சேனாபதிகள், இளங்குமரன் அக்கன் உள்ளிட்ட பல்லோரை அழித்ததை, உறுப் புக் குறை என்று கருதி வாலுக்கு அரக்கர் வைத்த தீயினை நகர்க்கு வைத்து எரித்ததை, ஏதும் தீதிலனாய் கடல் கடந்து இராமனிடம் மீண்டதை கண் கூடாக் கண்டவன்.

இப் பின்னணியில்தான் வீடணன் கூற்று அமைகிறது.

இயல்பாகவே, கேட்பதற்கும், காண்பதற் கும் இடையே பெருத்த வேறுபாடு உண்டு.

கேள்விப்பட்ட செய்தி ஒன்றனைக் குறித்து, மற்றும் பிறருடைய கருத்தினாலும் அவ் வடிப்படையில் ஏற்படும் தன் யூகத்தினாலுமே ஒருவன் தெளிவு பெறக் கூடும்.

அதற்கு மாறானது காட்சி.

தான் நன்கு கண்ட ஒன்றனுக்குப் பிறர் விளக்கம் தேவையில்லை.

கேட்ட ஒன்றைப் பற்றி எண்ணுங்கால் சொன்னவர் முழுமையாக, ஒன்றனையும் விடாமல் சொன்னாரோ, அல்லரோ? அவர் களும் தாமே கண்டனரோ, பிறர் சொல்ல அறிந்தனரோ என்றெல்லாம் ஐயங்கள் எழும்.

இக் காட்சிக்கு (தான் கண்டது) அத்தகைய ஐயங்கள் எழ இடமில்லை. கூடுதல், குறைவு என்பதற்கும் வாய்ப்பில்லை.

கேட்ட ஒன்றனுக்கு முன் குறித்த ஐயப் பாடுகள் இருப்பினும் இன்றேனும், சொல்லப் பெற்ற நிகழ்ச்சியை, நம் கண் முன் நிறுத்திக் காண்பதற்கு சூழ்நிலை பின்னணி, செயல் பாட்டு முறை, இவற்றிடையே இடம் பெற் றிருக்கும் நுண்மை போல்வனவற்றை நாம் உய்த்துத்தான் உணரவேண்டும்.

ஆனால் நேரில் காணுமிடத்து இவற்றுக் கெல்லாம் அவசியமுமில்லை; இடமுமில்லை.

எனவேதான்,

கரன், வாலி முதலியோரை இராமன் கொன் றதைத் தான் கேட்டறிந்ததாகக் கூறி னான்; அநுமன் இலங்கைக்கு வந்தான்; கண் டான்; எதிர்த்தான்; பொருதான்; எரி கொளுவி அழித்தான்; அதன் பின்னரும் களைப்பு, சோர்வு இன்றி கடல் கடந்து திரும்பிப் போயினன்—இவற்றைத் தானே கண்டிருப்பதாகக் கூறுகிறான்.

கேட்ட ஒன்றனை விட, கண்ட ஒன்றே மனத்தில் அதிகமாகவும் ஆழமாகவும் இடம் கொள்ளும்.

இது எல்லோருடைய இயல்பான அனு பவமும் கூட.

அந்த அனுபவம் தான் இப்பாடலில் வெளிக் கொணரப் பெறுகிறது.

இப்பாடலுக்கு இந்த அளவில் மட்டும் பொருள் கொண்டு விடுவோமானால் அது, கவிச் சக்கரவர்த்தியின் படைப்புத் திறனுக் கோ, அவன் படைத்த பாத்திரமான வீடண னுடைய அறிவுடைமைக்கோ பெருமை சேர்ப்பதாகாது.

ஆனால் அவ்வாறு பெருமை சேர்ப்பதற் காக இப்பாடலை வலிந்து பொருள் கொள் ளாமல் தெளிந்தே பொருள் காண முடியும்.

எவ்வாறு இராமன் கரன், வாலி முதலிய வர்களைக் கொன்றதனை வீடணன் கண் ணாற் காணவில்லையோ அவ்வாறே இலங் கையில் அநுமன் புரிந்த வீரச் செயல்களை இராமன் காணவில்லை. அதுமட்டும் அன்று, அவை பற்றிக் காதால் கேட்டதும் இல்லை.

இலங்கையில் தான் செய்த எதனைப் பற்றி யும் அனுமன் எவரிடமும் சொல்லவில்லை. (கண்டது, மீண்டது, கொண்டது, கொடுத் தது, செய்தி சொன்னது, சொல்லப் பெற்றது என்பன தவிர)

மயேந்திர மலையின் நீங்கி, கடல் கடந்து இலங்கை சேர்ந்து, திரும்ப அங்கு வந்தவன் தன் வரவுக்கு ஆவலுடன் காத்து நிற்கும் நண்பர்கள், சேனைத் தலைவர்கள் குரக்கிளங் குமரன் ஆகிய எவரிடத்துமே தன் வீரம் விளம்ப வெள்கி எதனையும் சொல்லவில்லை.

ஏன்?

தான் தன் புகழ்தல் தகுதி அன்று; உண்மை வீரத்தின் அடையாளம் அடக்கமே ஆகலின்.

அவ்வாறே இராமனிடமும் தான் செய்த செயற்கருஞ் செயல்கள் பற்றி, அநுமன் சொல்லாது இருந்தமையும் அத்தகையதே. எனவே அவனும் அறிந்திலன்.

ஆனல், நடந்தது என்ன?

தன் வரவுக்கு எதிர்நோக்கிக் காத்துக் கிடப் பாரிடம் அநுமன் கூடுகிறான்.

பொன் மேனியில் பூத்த புண்களைப் பார்க்கின்றனர். நெடுந்தொலைவில் புகை மண்டலம் வானின் இடத்தை நிரப்புவதைப் பார்க்கின்றனர்.

'மான வாள் முகமே உரைத்தது மாற்றம்' என்று கூறுகின்றனர். 'மீண்டான்' என உவந்தார்; 'கண்டான்' எனக் களித்தார். புண் தாங்கு மேனி கண்டு வருந்தினார்.

இவை தாமே அவர் நிலை?

தாள்களில், மார்பில், தோளில்,
தலையினில், தடக்கை தம்மில்,
வாள்களின், வேலின், வாளி மழையினின்
வகிர்ந்த புண்கள்,
நாள்கள் மேல் உலகில் சென்ற எண்
என, நம்பி கண்ண
ஊழ்கொள நோக்கி, நோக்கி...
—6012

இந்தப் பாடலிலும் பல அருமைகள் இருந்த போதிலும் நோக்கி என்ற ஒரு சொல்லே அவர் களது உள்ளத்து நிலையை விளக்கப் போது மானதாகும். எனினும், மேலும் உயிர் கூட்டு மாப் போல்,

'உயிர் உக உளைந்து உயிர்த்தார்' என்ற ஈற்றுத் தொடர் உள்ளது.

இப்படி வந்த அநுமன், அங்கதன், ஜாம்ப வான் மற்றுப் பிறர்க்கும் முறைப்படி வணக்கம் செலுத்திவிட்டு, அங்குளார் அனைவர்க்கும் சொன்ன செய்தி ஒன்றே. ''......இவண் இருந்தோர்க்கு எல்லாம் ஞால நாயகன் தன் தேவி சொல்லினள் நன்மை'' என்பதே அது.

அவர்கள் கேட்ட கேள்விக்கு சீதை செய்த தவம் பற்றியும், அவள் அடையாளமாகக் கொடுத்தனுப்பிய சூளாமணி பற்றியும் சொன்னனே தவிர,...

நீண்ட வாள் அரக்கரோடு நிகழ்ந்ததும்,
நெருப்புச் சிந்தி
மீண்டதும், விளம்பான்
ஆயினமை எதனுல் அமைந்தது?
'தான் தன் வென்றியை உரைப்ப,
வெள்கி' யமையால்
—6015

அல்லவா?

கூறானே எனினும் அங்கிருந்தவர்கள் அநு மன் இலங்கையில் என்ன செய்தான் என் பதனை உணரவே செய்தனர்.

இதனைக் கம்பன்,

'பொருதமை புண்ணே சொல்ல,
வென்றமை போந்த தன்மை
உரைசெய, ஊர் தீ இட்டது ஓங்கு
இரும்புகையே ஓத,
கருதலர் பெருமை தேவி
மீண்டிலாச் செயலே காட்ட,
தெரிதர உணர்ந்தோம்; பின்னர்,
என் இனிச் செய்தும்?' என்றார்
—6016

என்று பாடுகிறான்.

கவிச் சக்கரவர்த்தியின் சொல்லாட்சியை ஒவ்வொரு இடத்திலும் காண முடிகிறது.

முன்னர் நாம் கண்ட பாடலில் (6583) கேட்டு, கண்டு என்று விடணன் வாயிலாய்க் கம்பன் பேசுகிறான்.

இங்கே வானர வீரர்கள் வாயிலாக 'தெரிதர உணர்ந்தோம்' என்கிறான்.

இத்தகைய சொல்லாட்சிகளின் அருமை உன்னி உன்னி பாராட்டத்தக்கது.

ஏனெனில் இலங்கையில் அநுமன் செய்த வீரச் செயல்களை இவர்கள் காணவுமில்லை. அவை பற்றி அநுமன் இவர்களிடம் ஒன்றும் சொல்லாததனால், இவர்கள் கேட்டறியவும் இல்லை; எனினும், குறிப்பால் உணர்ந்து கொண்டனர்.

இராமனைக் குறுகிய அநுமன் வணங்கி, நடந்தன கூறியபோதும், சீதையின் பெரு மையை உயர்த்திப் பேசினானே அன்றி வேறு தன்குறித்தவை எவையும் கூறிலன்.

அநுமன் நிலையை இவ்வாறு அமைத்ததில் கவிச்சக்கரவர்த்தியின் மனோதத்துவ அறிவு பளிச்சிடுகிறது.

பிறன் ஒருவனால் கவர்ந்து, கடத்தப்பட்ட தன் மனைவி உயிரோடு இருக்கிறாளா என்று

அறிவதனை விட அவள் கற்புடையவளாக இருக்கிறாளா என்று அறியவே எந்த ஆண் மகனும் அக்கறையும் ஆவலும் கொண்டிருப் பான்.

சாதாரண மனிதனாகப் பிறந்து நடந்து கொண்டிருக்கும் இராமனும் இதற்கு விதி விலக்கல்லன்.

எனவேதான்,

நூலை நயந்து நுண்ணிது உணர்ந்து கற்றுத் தெளிந்த கலைவல் மாருதி இராமனைச் சேர்ந்த உடன் எடுத்த எடுப்பிலேயே தன் செய்கையால் சீதையின் இருப்பினை, நெறி பிறழாமையைக் குறிப்பாக உணர்த்தி விடு கிறான்.

நடந்தன அனைத்தும் சொல்லாலும் விளக்கி, அவள் தந்த சூளாமணியை இராமனி டம் கொடுத்தானே அன்றி, இலங்கையில் தான் நிகழ்த்தின எவையும் சொல்ல வில்லை.

தன்னுடைய வானரச் சகாக்களிடமே சொல்லாதிருந்தவன் இராமனிடம் சொல்லு வான் என்று எதிர்பார்க்கத்தான் முடியுமா?

இத்தகைய நிலையில்தான் அநுமன் இலங் கையில் காட்டிய வீர தீர சாகசங்களை வீட ணன், தக்கவனிடத்து, தக்க நேரத்தில் குறிப் பிடுகிறான்.

பார்க்கப் போனால் வீடணன் குறிப்பிடுவது தான் பொருத்தமுமாகும். அவன் தானே நேரில் கண்டவன்?

அநுமன் இதனை வேறு எவரிடமும் கூறி யிருக்கமாட்டான் என்பதனை நன்கு அறிந் தவன், புரிந்து கொள்ளக் கூடியவன் வீட ணனே. மேலும் இராமன் தூதுவனாக இலங்கை சென்றவன் எத்தகைய வீர சாகசங் களை அங்கே எளிதில் புரிந்தான் என்பது இராமனுக்குத் தெரியத்தான் வேண்டும் என்று நன்கு உணர்ந்தவனும் அவன் தான்.

இராவணன் அவையில் இராமனைப் பற்றி அநுமன் கூறியன அனைத்தும் நேரில் கேட்ட வன் ஆகலின், அத்தகைய அநுமன் தூது போந்து எத்தகைய வீரச் செயல்கள் விளைத் தமையால், அனைத்துள அரக்கர் உளத்திலும் இராமனைப் பற்றியும், அவன் வீரத்தையும், உண்மைத் தன்மையையும் ஆழப் பதித்தான் என்பது பற்றி இராமன் அறிய வேண்டும், தான் அறிவிக்க வேண்டும் என்று அவ் அறி ஞன் விரும்புவது இயற்கையே. அதற்கு இராமனோடு இருந்து இலங்கை பற்றிய விவரங்களை விளக்கிக் கூறும் இந்நேரம் தவிர வேறு வேளை பொருத்தமானதாக அமையாது.

சொல்லப் போனால் இலங்கை கேள்விப் படலத்தில் இவ்விருவர் உரையாடலுக்கு முன் னர் சரண் அடைந்த வீடணனை இராமன் ஏற்பதா? மறுப்பதா? என்பது தான் பிரச்னை யாக இருந்ததே தவிர வேறு எது பற்றிப் பேச வும் தக்க வேளையும் வாய்ப்பும் இருந்த தில்லை.

எனவே வேளைப் பொருத்தமும் கூட.

இப்பாடலில் இன்னொரு தொனிப் பொரு ளையும் காண முடியும்.

கரன் முதல் வீரர்கள் முதலில் பட்டவர். பின்னர்ப் பட்டவன் வாலி. இவ் விருவரை யும் வீடணன் குறிப்பிட்டுக் கூறுவதற்கு ஒரு பொருளும், காரணமும் இருக்கவேண்டும்.

கரன் எத்தகையவன் என்பதனையும் வாலி எத்திறத்தவன் என்பதனையும் உணர்ந்து கொண்டால்தான் வீடணனது இக்கூற்றில் பொதிவுறு பொருளைக் காண முடியும்.

வனத்திலிருந்த இராம இலக்குவர்களை சூர்ப்பணகை அணுகி, இறுதியில் அவள் இலக் குவனால் உறுப்பறை கொண்டாள். அதன் காரணமாக இராம இலக்குவரைப் பழி வாங்க விரும்புகிறாள். அப்பொழுது தன் உறவினர் கள் அனைவரையும் பெயர் கூறி விளித்து பிரலாபிக்கிறாள்.

தசமுகனாகிய இராவணன், அவன் தம்பி ஆகிய கும்பகர்ணன், இளைய இந்திரசித்தும் அவளால் விளிக்கப்படுகிறார்கள்.

இம்மூவரும் தம் வீர சாகசங்கள் காரண மாக தேவர்களுக்கு அச்சம் உண்டாக்கியவர். இவர் தம் பெயர் கேட்ட அளவில் கூற்றுவனும் குலைவான்.

எனவே அவர்கள் மூவரை அவள் விளித்த தில் பொருள் உண்டு. மேலும் அவள் 'வாராயோ! காணாயே?'' எனக் குறிப்பிட் டது கரனையே.

மரனேயும் நெடுங்கானில் மறைந்து உறை
யும் தாபதர்கள்

உரனேயோ? அடல் அரக்கர் ஒய்வேயோ?
உற்று எதிர்ந்தார்,
''அரனேயோ? அரியேயோ?
அயனேயோ?'' எனும் ஆற்றல்
கரனேயோ? யான் பட்ட கையறவு
காணாயோ?
—2838

என்பது தான் அவள் புலம்பலின் ஒரு கூறு.

அதாவது கரன் தன் அளப்பரும் ஆற்றலால் சிவன், திருமால், பிரமன் ஆகிய மூவர்க்கும் ஒப்பாகக் கூடியவன்.

அத்தகைய கரனின் ஆளுகைக்கு உட்பட்ட இடத்தில் அன்றோ தான் உறுப்பறைக்கு ஆளாக நேரிட்டது என்றும் குறிப்பிடத் தவற வில்லை.

உரன் நெரிந்து விழ, என்னை உதைத்து,
உருட்டி, மூக்கு அரிந்த
நரன் இருந்து தோள் பார்க்க, நான்
கிடந்து புலம்புவதோ?
கரன் இருந்த வனம் அன்றோ?
—2840

அதாவது கரன் இருக்கும் வனத்தில் போந்து அவளை அந்நிலைக்கு ஆளாக்கும் நெஞ்சுரம் எவர்க்கும் இராது என்பது அவள் துணிவு.

கரன் நாடிச் சென்று, காலடி விழ்ந்து கதறு கிறாள். அவள் கொண்ட உறுப்பறை கண்டு கண் நீக்கொள, செருப்பறை முழங்க, தானே சென்று அவ்விருவர் மானிடர் தம்மைக் கொன்று வருவதாகக் கூறுகிறான்.

கரன் எத்தகையவன்?

கம்பன் தன் கூற்றாகக் கரனைக் குறிப் பிடுவது

எதிர் கண்டவர்
நாட்டம் தீய உலகை நடுக்குவான்
—2882

என்ற தொடரால்.

மேலும் அவனை

வெம் கரப் பெயரோன், வெருண்டான்,
விடைச்
சங்கரற்கும் தடுப்ப அருந் தன்மையான்
—2896

என்று வியப்பான்.

அதாவது விடை ஏறும் சங்கரனாலும் தடுத்து நிறுத்தற்கரிய தனிப் பேராண்மையன் என்கிறான்.

அம்மட்டோ, தொடர்புகழாக, கரன் வீரர் குறித்து,

ஆற்றலால்
காலனும், 'காலன்' என்று
அயிர்க்கும் காட்சியார்
—2916

என்றும் புகல்வான்.

கடுங்கரன் எனப் பெயர்
படைத்த கழல் வீரன்
—3043

என்பான்

இத்தகைய கொடுமை நிறைந்த கரனோடு பொரற்கு என அப் போர்ஏறு புறப்பட்ட போழ்தத்து இளையவன் தனக்கு அப் போரினை நல்கி அருள வேண்டுகிறான்.

இராமன், அதனை ஏலாது 'சீதையைக் காத்திரு' எனச் சொல்லி விட்டு, தன்னந் தனி யனாய் அரக்கரோடு பொரற்குப் போகின் றான்.

அப்படி அவன் புறப்படும் பொழுது சீதை சற்று கவலை அடைகிறாள்.

கம்பன் இதனை,
குழையுறு மதியம் பூத்த கொம்பனாள்
குழைந்து சோர
—2939

என்பான்.

அத்தகைய கர தூஷணாதியரையும் அவரு டன் போந்த பதினான்கு சேனைத் தலைவர் களையும், போர்க்கு என எழுந்த அரக்கர் கூட்டத்தையும் தன் ஆண்மை தோன்ற முழுத்தம் ஒன்றில் முடித்து விடுகிறான்.

கர தூடணரை, சார்ந்த படைகளை இராமன் கொன்று குவித்தது எத்தகைய வீரச் செயல் என்பதனை மற்றொரு நிகழ்ச்சியினா லும் உணர்ந்து கொள்ள முடியும்.

இராமன் போர்க்குப் புறப்பட்டுப் போன தால், குழைந்து சோர்ந்த கொம்பனாள் இப் பொழுது தளிர்க்கின்றாள்.

இதனைக் கம்பன்

.....இராமனும் ஏகினான்,
அனிக வெஞ்சமத்து ஆர் உயிர் போகத்
தான்
தனி இருந்த உடல் அன்ன, தையல் பால்.
—3061

இஃதன்றியும் கரனுடன் போர் செய்து கொண்டிருக்கும் பொழுது இராமன் கையில் இற்றுப்போக, போர் நிகழ்ச்சிகளைப் பார்த்து, வானவரும், கையகத்த ஒரு வில்லும் இற்றது கண்டு, மாற்றுவில் இன்மை உணர்ந்து

...துணுக்கம் உற்று ஏங்கினார்;
மற்று ஓர் எவம் சிலை இன்மை மனக்
கொளா,
'அற்றதால் எம் வலி' என, அஞ்சினார்
—3050

அப்பொழுதுதான் இராமன் பின்புறம் நோக்க, பரசுராமனிடத்திலிருந்து பெற்று முன்னர்த் தன்பால் தந்து வைத்த வரிவில்லை, வருணன் தக்க தருணம் இதுவே என ஓர்ந்து கொடுக்கின்றான்.

இத்தகைய சூழ்நிலையில்தான் கரதூடணர் களை அவன் கூட்டத்தினரை இராமன் அழித் தொழித்தான்.

அந்தச் செயலை இப்பொழுது வீடணன் பெரிதுபடுத்திப் பேசவில்லை.

அடுத்து நடந்தது வாலி வதம்.

வாலியை முழுக்க முழுக்க அறிந்திருந்த அநுமனே எத்தகையவன் வாலி என்பதனைக் குறிப்பிடும்போது,

நாலு வேதம் ஆம் நவை இல் ஆர்கலி
வேலி அன்னவன், மலையின் மேல் உளான்,
சூலிதன் அருள் துறையின் முற்றினான்,
வாலி என்றுளான், வரம்பு இல் ஆற்றலான்;
நிலனும், நீரும், மாய் நெருப்பும்,
காற்றும், என்று
உலைவு இல் பூதம் நான்கு உடைய
ஆற்றலான்;
—3822, 3824

என்றும், உடன்று மேல் எழினும்,

'கந்த வேள் வேல் செலாது
அவன் மார்பில்;'
—3826

என்றும் கூறுகிறான்.

இவற்றோடு அமைதி பெறாமல், வாலியை அநுமன் வாயிலாக,

பார் இடந்த வெம் பன்றி பண்டைநாள்
நீர் கடைந்த பேர் ஆமை, நேருளான்;
—3828

என்று குறிப்பிடுவான்.

இக்குறிப்பில் காணப்பெறும் சிறப்பு என்ன வெனில் திருமாலின் இரு அவதாரங்களாகிய வராகம், கூர்மம் என்றவற்றைத் தனக்கு ஒப் பாகக் கொண்டுள்ளவன் வாலி என்பதாம்.

இவ்விரண்டு அவதாரங்களைக் குறிப்பிட்ட தும் கூட அவன் மனத்திற்கு நிறைவு தாராமை யால் அதே பாடலின் ஈற்றிரு அடிகளில்

மார்பு இடந்த மா எனினும், மற்றவன்

தார்கிடந்த தோள் தகையவல்லதோ!

என்று மற்றொரு அவதாரத்தையும் கொண்டு வந்து விடுகிறான்.

இந்த நரசிங்க அவதாரத்தில் கம்பனுக்குத் தனி ஈடுபாடு உண்டு என்பதை, வான்மீகத்தில் இல்லாத 'இரணியன் வதைப்படலம்' உணர்த்தி நிற்கும்.

அதன் முன்னோடியாகவே 'மார்பு இடந்த மா' எனக் குறிப்பிடுகிறான்.

அதுவும் கவிச் சக்கரவர்த்திக்கு முழு மன அமைதி தரவில்லை. எனவே சுக்கிரீவன் வாலி யைப் போருக்கு அழைத்தபோது அவன் போரை விரும்பி குன்றின் புறத்து வருவதனை

குன்றூடு வந்து உற்றனன்—கோள் அவுணன்
குறித்த
வன் தூணிடைத் தோன்றிய மா நரசிங்கம்
என்ன.
—3972

என்று குறிப்பிடுகிறான்.

கடல் உளைப்பதும், கால் சலிப்பதும்,
மிடல் அருக்கர் தேர்மீது செல்வதும்,
தொடர மற்றவன் சுளியும் என்று அலால்,—
......அயலின் ஆவவோ?
—3830

என்றும் கூறுவான்.

''அந்தகன் தனக்கு அரிய ஆணையான்'' அவன் எனவும் அநுமன் கூறுவான்.

சொற்பஞ்சத்திற்கு ஆளானவன் அல்லன் கவிச் சக்கரவர்த்தி என்பதைச் சொல்லத் தேவையில்லை.

அத்தகையவனே வாலியினுடைய வீரத்தைக் குறிப்பதற்கு மேலும் சொற்கள் கிடைக்காமல் சொன்ன சொல்லையே திருப்பி ஆள்கிறான். அடுதிறல் வாலி என்ற சொல் அடுத்தடுத்து மூன்று பாடல்களில் கம்பனால் பயிலப் பெறுகிறது என்ருல் வாலியின் வீரத்தை முழுமையாக உணர்த்தக் கம்பனுக்குச் சொற்களே கிடைக்கவில்லை என்றுதான் கொள்ளவேண்டும்.

இச்சொல் ஆட்சி (அடுதிறல் வாலி) 3993, 3996, 4002 ஆய மூன்று பாடல்களில் வருவதே இதற்குப் போதிய சான்று ஆகும்.

நிலனும், நீரும், மாய் நெருப்பும்
காற்றும், என்று
உலைவுஇல் பூதம் நான்கு உடைய ஆற்றலான்; என வாலியைப்பொய் இலாத அநுமன் குறிப்பிட்டான் என முன்னர் கண்டோம்.

அதன் தொடர்ச்சியாகவே இராமனுடைய அம்பு பட்ட வாலி என்ன ஆனான் என்பதைக் கவிச்சக்கரவர்த்தி

......ஊசியின் சென்றது—நின்றது......
நீரும், நீர் தரு நெருப்பும், வன் காற்றும்,
கீழ் நிவந்த
பாரும், சார் வலி படைத்தவன்
உரத்தை அப் பகழி.
4000

இவற்றை எல்லாம் இங்கு எடுத்துக் காட்டும் நோக்கம் என்ன எனில் இராமனின் வீரச் செயல்களைக் கேட்டு, அதனால் இராமனிடம் வர வேண்டும் என்று வரவில்லை எனும் விடணனுடைய கூற்றைத் தெளிவாக்கவே.

அநுமனுடைய வீரச் செயல்களைக் கண்டு தான், தான் இராமனிடத்துச் சரணாகதி புக்கதாக விடணன் கூறுகிறான்.

விடணனால் வீரம் பாராட்டப் பெற்ற அநுமனே வாலியைப் பற்றிக் கணித்தவை இவை என்பது முன் கூறப் பெற்றது.

இது ஒருபால் ஆக, சுக்கிரீவன் வாலியை இராமன் ஆலோசனையின் பேரில் போர்க்கு அழைக்க, வாலியும் உடன் படுகிறான்.

போரிடை இருவரும் புக்கு கைகலக்கும் காலத்தில் இராமன் அவ்விருவரையும் சுட்டி இலக்குவற்குக் காட்டி.

..................ஐய!
எவ் வேலை, எம் மேகம், எக் காலொடு
எக் கால வெந் தீ
வெவ் வேறு உலகத்து இவர் மேனியை
மானும்?
—3974

என்று வினவுகிறான்.

இங்கும் கூர்ந்து நோக்கத் தக்கது என்ன எனில், நாற் பெரும் பூதங்களின் ஆற்றலை ஒருங்கே பெற்றவன் வாலி என்று முன்னர் அநுமன் கூறியதனையே அனுவதித்து இத் தனுவின் செல்வனும் கூறுகிறான்.

அளகை • மூதூர் எரி உண இந்திரன் இருக்கை எல்லாம் பொரி உண, உலகம் மூன்றும் பொது அறப் புரந்த அப் பொன்னார் வலயத் தோளான் இராவணன் தன்னைச் சுந்தரத் தோள்களோடும் வாலிடைத் தூங்கச் சுற்றி, சிந்துரக் கிரிகள் தாவி, வாய்வழி குருதி சோர அவ் வலித் தகை அரக்கனை நலித்து அட்ட மூர்த்தி தாள் பணிந்தவன் வாலி.

அத்தகைய மிடல் கொள் வாலியின் தட மார்பிடை இராமன் விடுத்த கணை, சுவைக் கதலியின் கனியில் சேர ஊன்றிய ஊசிபோல் ஆனது. வாலியும் பட்டான். தான் கேட்டிருந்த இச் செய்தியையும் வீடணன் பெரிது படுத்தவில்லை. மாறாக அநுமன் இலங்கையில் ஆற்றிய வீரச் செயல்களையே பெரிது படுத்தித் தான் சரணம் அடைந்தமைக்கு அவையே காரணம் என்று கூறுகிறான்.

விடணனுடைய இக் கூற்றில் உள்ளடங்கிக் கிடப்பது இராமனுடைய பெருமையை உணர்த்தும் ஓர் அற்புதமான கருத்து.

அநுமன் ஒரு குரக்கினத்தான்; இராம தூதனாகவே இலங்கை சென்றவன் எரி கொளுவி மீண்டவன்; எதிர்த்த அரக்கரைத் தொலைத்தவன்.

விடணன் கண்டது அநுமன் செயல்களையே.

இராமன் விளைத்த வீரச் செயல்களை விஞ்சியதாக அநுமன் செயல்களைப் பற்றிக்

கருதியிருப்பானேயானால் வீடணன் சரண் புகவேண்டிய இடம் அநுமன் பாலதே; இராமனிடத்து அன்று.

தான் புகல் புக்கமைக்கு அநுமன் செயல்களே காரணம் என்றுதானே வீடணன் கூறியுள்ளான்.

உடையான் ஏவல் ஏற்று, பகைப்புலம் சார்ந்து வெஞ்சமர் விளைத்து தீதின்றி மீண்டான் ஒரு தூதுவன் எனின், அவனை ஏவிய தலைவனின் வீரமும் அருளும் எத்துணைப் பெரியதாக இருக்க வேண்டும், என்பதனைத்தான் அவன் கூற்று குறிப்பால் உணர்த்துகிறது.

அப்படிக் கூறும் பொழுது, கவிச் சக்கரவர்த்தியின் அறிவுத் திறன், வீடணன் வாயிலாகத் தன் தனித்த முத்திரையுடன் பளிச்சிடுகிறது. அதுதான் அப் பாடலின் ஈற்றில் அமைந்த ஈறில்

''புகழோய்'' என்ற விளி.

அநுமனைத் தன் சேவகனாக, தூதுவனாகப் பெற்றிருக்கும் இராமன் புகழோன் அன்றி வேறு எவ்வாறு இருத்தல் இயலும்?

வீடணன் பாடலில் மேலெழுந்தவாரியாகத் தோன்றக் கூடிய, ஒவ்வாத் தோற்றம் உடைய இராமன் புகழ் அதற்கு மாருக அக்கூற்றின் உண்மைப் பொருள் கூறுபவன் அறிவு நலம் காரணமாகப் பொலிந்து மேம்படுகிறது.

சொல்லப் போனால், இதுவரையில் இராமனுக்குத் தெரிந்திராத பல நிகழ்ச்சிகளை, அநுமன் வீரத்தினை, இராமனிடத்து அதனை நேரில் கண்ட வீடணன் சொல்லி விட வேண்டும்; அப்படிச் சொல்வது அநுமன் பெருமையை இராமன் உணரச் செய்யும். அப்படி இராமன் அதனை உணர்வது அவசியம். அதன் காரணமாகத்தான் இராமனை அணுகியதும், அடைக்கலம் புக்கதும் நேர்ந்தன. இத்தகைய வாய்ப்பினை தனக்கு நல்கிய வகையில் வீடணன் அநுமனுக்கு நன்றிக் கடன் பட்டிருக்கின்றான்.

தான் பட்ட அந்நன்றிக் கடனில் ஒரு சிறு பங்காவது தீர்க்கும் வகையில்தான் வீடணன் கூறுகிறுன்.

அடக்கம் காரணமாக தற்பெருமைக் கூற்றாகும் என்று எண்ணி அநுமன் கூறாது விட்டவற்றைக் கூறி, அவனைப் பாராட்டு வகையில் அவன் நாயகனிடத்திலேயே சொல்லி விடுகிறான்.

இப்பாடலில், ஒப்பற்ற இவ் ஒரே பாடலிலேயே, வீடணனது அறிவுச் செறிவு வெளிப்படல் காணலாம்.

நூலிடை வீடணனுக்கு அமைந்து இருக்கும் அடை மொழிகள் அனைத்தும் அவன் அறிவுநலம் விளக்குவனவே.

| | |
|---|---|
| அந்தமில் குணத்தினான் | –6513 |
| நன்றுணரும் வீடணன் | –6135 |
| அயிர்ப்பு இல் சிந்தையான் | –6397 |
| அறிஞரின் மிக்கான் | –6169 |
| அறிவினுக்கு அறிவு போல்வான் | –10225 |
| எண்ணு நூல் கற்றோன் | –6589 |
| ஞானத்தம்பி | –6826 |
| மேதாவிகட்கெல்லாம் மேலான மேன்மையன் | –6364 |
| புனித நூல் கற்றுணர் புந்தியான் | –10002 |
| செவ்வழி அறிஞன் | –6529 |
| முழுதுணர் புலவன் | –6531 |
| விளைவினை அறியும் மேன்மை வீடணன் | –6506 |

என்பன அவற்றுள் சில.

தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவேதான் இராம காதையைப் பாடியதாக பாயிரத்தில் தான் கூறியிருப்பதற்கு ஏற்ப, வள்ளுவ ஆசான் வலியுறுத்தும் அறிவுடைமையை வெளிக்காட்டும் முகத்தான் பலவற்றைக் கூறிய கவிச் சக்கரவர்த்தி வீடணன் வாயிலாக இப்பாடலிலும் அதனை நிலைநிறுத்துகிறான்.

கிடைத்த வெற்றிகள் இவர்களுள் அவனுக்குப் பெருந்தீங்கு இழைத்தவன் இராவணன். அவனிடத்தில் இராமன் நடந்துகொண்ட முறை அவனுடைய ஆண்மை நலத்தினை வெளிப் படுத்துகிறது.

தன் மனைவியைக் கவர்ந்து சென்ற இராவணன்பால் அவன் காட்டும் கருணை வியப்புக் குரிய ஒன்று. அனுமன் தூது வெற்றி பெறவில்லை. இராமன் படை எடுத்துச் சென்று வடதிசை வாயிலில் முற்றுகையிட்டான். அந்நிலையிலும் போரினைத் தவிர்க்க எண்ணி அங்கதனைத் தூது செல்லப் பணித்தான். அதுவும் வெற்றி பெறவில்லை. வேறுவழி யின்றி இராவணனோடு போரிடத் தொடங் கினான்.

அந்தப் போரில் இராவணன் மணிமுடியை இழந்தான். சிறந்த கவிஞன் வசைக் கவிதை பாட அரிய புகழ் இழந்த பெரியவனைப் போலக் காட்சி தந்தான். தன் பெருமை நீங்கிடத் தரையை விரல்களால் கிளைத்து நின்றான். கண்கள் தாழ்ந்தன. முகத்தில் ஒளியில்லை. ஆலின் விழுதுபோல் இருபது கைகளும் தொங்கிக் கொண்டிருந்தன. இராமன் நினைத்திருந்தால் அன்றே அவனைக் கொன்று தன்னுடைய ஆத்திரத்தைத் தீர்த் துக் கொண்டிருக்கலாம். ஆயினும் இராமன் அவ்வாறு நடந்து கொள்ளவில்லை. அந் நிலையிலும் அறிவுரை கூறி இராவணனைத் திருத்த முயன்றான். பகைவனது தளர்ச்சி யைத் தனது வெற்றிக்கு வாய்ப்பாக மாற்றிக் கொள்ளாத பெரு வீரனாகத் திகழ்ந்தான். ''இராவணா, அறத்திற்கு மாறாகச் சென்று வெற்றி பெறுதல் தேவர்களுக்கும் முடியாத செயல். பாவி! உன்னைக் கொல்லலாம். யான் அதனைச் செய்ய விழையவில்லை. உன் படைகளோடு இலங்கைக்குத் திரும்பிப் போ. உன் படைகள் அனைத்தையும் திரட்டிக் கொண்டு வந்து போரிட வல்லவனாயின் அதனைச் செய்; இல்லையெனில் ஒளிந்து கொள். சீதையை விடுத்து, தேவர்களைத் தக்க முறையில் வைத்து வீடணனை இலங் கைக்கு அரசனாக்கி அவன் வழி நிற்பாயேல் நீ பிழைக்க வாய்ப்பு உண்டு. உன்னைக் கொல் லாது விடுவேன். உனது வலியனைத்தையும் ஒன்று சேர்த்துப் போரிட வந்து நின்றாலும் நன்று. ஆனால் இனிப் பிழைத்திருக்கலாம் என்று மட்டும் எண்ணாதே. இன்று எல்லா வற்றையும் இழந்து வெறுங்கையனாய் நிற் கிறாய். உன் படைக்கலன்களும் பிறவும் காற் றில் உதிர்ந்த பூளைப் பூக்கள் ஆயின. ஆதலின் போரிட விழைந்தால் இன்று சென்று ஒய்வெடுத்துக்கொண்டு நாளை படைதிரட் டிக் கொண்டு வா'' என்று இரக்கத்தோடு அறிவுரை கூறினான். இப்படிப் பகைவனுக் கும் உதவும் பண்பே பெருவீரனுக்குச் சிறப்பு. இதுவே ஊராண்மையும் ஆகும். ''ஊராண் மை—உபகாரியாந் தன்மை, அஃதாவது இலங்கையர் வேந்தன் போரிடைத் தன் தானை முழுதும்படத் தமியனாய் அகப்பட்டானது நிலைமை நோக்கி அயோத்தியர் இறை மேற் செல்லாது, 'இன்றுபோய் நாளை நின் தானை யோடு வா' என விட்டாற் போல்வது'' என்கிறார் பரிமேலழகர் (குறள் 773-இன் சிறப்புரை). தன்னுடன் எதிர்த்துப் போ ரிட்டுத் தோற்று வீழும் நிலையடைந்த கும்ப கருணன் கடைசியில் வேண்டிக் கொண்ட தற்கு ஏற்ப அவன் தலையினைக் கடலில் மூழ்கடிக்கும் இராமனது செயலும் ஆண்மை நலத்தின் பாற்படும்.

இந்த வீரச்சிறப்பினை—ஆண்மை நலத் தினை—அனுமனிடத்தும் காணலாம். சீதை யைத் தேடி இலங்கை சென்ற அனுமனுக் கும் சம்புமாலிக்குமிடையே கடும்போர் நிகழ்ந் தது. அனுமன் அப்போரில் உடலெங்கும் விழுப்புண் பெற்றான். அந்நிலையிலும் தனித்து நின்ற பகைவனிடம் இரக்கம் காட்டி னான். அவனிடம் ''சம்புமாலி! எல்லாப் படைக்கலன்களையும் இழந்த நிலையில் ஒரே ஒரு படைக்கலனோடு நிற்கிறாய்; உன்னிடம் ஒரே ஒரு தேரே உள்ளது; எளிய வர்களைக் கொல்வது அறமன்று; உன்னால் உடன் வந்தவர்களையும் காக்க இயல வில்லை. உனக்குச் சாவதைத் தவிர வேறு வழியில்லை. தன்னந் தனியனாக நின்றாய்! இங்கிருந்து போய்விடு'' என்றான்.

'ஏதி ஒன்றால், தேரும் அஃதால்; எளி
யோர் உயிர்கோடல்
நீதி அன்றால்; உடன்வந் தாரைக் காக்
கும் நிலைஇல்லாய்!
சாதி; அன்றேல் பிறிதுஎன் செய்தி? அவர்
பின் தனிநின்றாய்!
போதி' என்றான் பூத்த மரம்போல்
புண்ணால் பொலிகின்றான்

(சம்புமாலி வதைப் படலம் 43)

(3) புறப் பகையைப் போலவே மனிதர்களை நலிவிப்பது அகப்பகை. அகப்பகை புறப்பகை யினைக் காட்டிலும் ஆற்றல் மிக்கது. இவ்வுட்பகை காமம், வெகுளி, கடும் பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்று ஆறு வகைப்படும். இவற்றுள் மற்றவற்றிற்குக் காரணமாய் இருப்பது காமம். ஒழித்தற்கு அரியது அது. பகை முகத்தில் ஈட்டிய வெற்றியினை மாதர் நகை முகத்தில் இழந்து அழிந்தவர்கள் பலர். தனக்கு உரியவள்பால் செல்லும் காமம் பழிக்குரியதன்று. பிறனுக்கு உரியவள்பால் செல்லும் காமமே பழிக்கு உரியது இதனால்தான்.

பிறன்மனை நோக்காத பேராண்மை
சான்றோர்க்கு
அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு
(பிறனில் விழையாமை 8)

என்று அக்காமம் இன்மையைப் பேராண்மை என்றும் சிறந்த ஒழுக்கம் என்றும் போற்றுகிறார் திருவள்ளுவர். இக்குறளுக்கு உரை வரைந்த பரிமேலழகர், ''புறப்பகைகளை அடக்கும் ஆண்மையுடையார்க்கும் உட்பகையாகிய காமம் அடக்குவதற்கு அருமையின் அதனை அடக்கிய ஆண்மையைப் பேராண்மை என்றார்'' என்று விளக்கம் தந்துள்ளதை நோக்கின் புறப்பகையை வெல்வது ஆண்மை என்பதும் உட்பகையை வெல்வது ஆண்மை நலம் என்பதும் விளங்கும்.

இராமாயணம் ஆண்மை மிக்காரும் இந்த நலமில்லையெனில் வீழ்வர் என்பதனை இராவணன் வீழ்ச்சியால் தெளிவாக்குகிறது. பிறன்மனை நோக்காத ஆண்மை நலம் இல்லாமையால் ஆயிரம் மறைப்பொருள் அறிந்த மேதையாய் விளங்கிய இராவணன் பேதையாய் மாறினான். 'பேதையாய்க் காமம் பிடிப்பாய் பிழைப்பாயோ?' (அதிகாயன் வதைப் படலம் 271) என்னும் தானியமாலையின் அவல வினாவில் அவன் வீழ்ச்சியின் வித்து யாது என்பது குறிக்கப்படுதல் காணலாம்.

திரைகடையிட்டு அளப்பரிய வரம் என்னும்
பாற்கடலைச் சிதை என்னும்
பிரைகடையிட்டு அழிப்பதனை அறிந்தேனோ
தவப்பயனின் பெருமை பார்ப்பேன்?
(இராவணன் வதைப் படலம் 241)

என்று மண்டோதரியின் புலம்பல் மொழியிலும் இதுவே ஒலிக்கிறது.

இதுகாறும் கண்டவற்றால், ஆண்மை என்பது வலிமை, வீரம் ஆளுந்தன்மை என்று பொருள்படும் என்பதும் இவற்றுள்ளும் வீரம் என்பதே சிறப்பானது என்பதும் விளங்கும். போரிடுவது ஆண்மை என்றால், மற்றவர்க்காகப் போரிட்டு அவர்களைக் காத்தலும் போரில் பகைவர்களுக்கு இரக்கங் காட்டுதலும், புறப்பகையைக் காட்டிலும் உட்பகையை அடக்குவதும் ஆண்மை நலம் ஆகும் என்பதும் தெளிவாகும்



# ஒழுக்கப் புதையல்

மகாவித்வான் டாக்டர் ச. தண்டபாணி தேசிகர்

பல ஆண்டுகள் புற்றிடங் கொண்டிருந்து, பொறிவாயில் ஐந்தவித்து, பரமன் வாயிலாக இன்பவுலகத்திலே ஞானப் புதையல் இருக்கிறது என்பதை முதலிற் கண்டு காட்டியவர் வான்மீகி முனிவர்தான்! அவர் காட்டிய புதையல் ஆதிகாவியமாகிய இராம காதையே.

காவியங்கள், உயர்வற உயர்ந்த உத்தமர்களின் வரலாற்றை உலகியலோடு ஒட்ட வைத்துக் காட்டிச் செல்லும் கவித்துவ சக்தியால், நீதிகளைப் போதிக்கும் முறையில், ஆசை வலையிற் சிக்கி, விடுதலைக்கு வழி தெரியாமல் தவிக்கின்ற நமக்கெல்லாம் வழிகாட்டும் வகையில், கட்டிளங்காளைக்குக் காதல் வலையைக் கண்ணுலேயே வீசித் தம்மகப்படுத்தி அவனைத் திருத்தி என்றென்றும் ஒழுக்கத்துடன் வாழச் செய்வன ஒருவகை. அத்தகைய காவியத்தைக் **'காந்தா ஸம்மிதை'** எனப் பெயரிட்டழைக்கும் அணி நூல்கள் (அலங்கார சாஸ்திரங்கள்).

மற்ருெருவகை, யார் சொன்னுலும், என்ன சொன்னுலும் கேட்காமல், தன்போக்கிலேயே தடுமாறி, ஊரைக்கெடுத்துப் பேரையும் கெடுத்துக் கொண்டு அலைகின்ற ஊதாரிகளுக்குப் பிரம்படி கொடுத்தும், சிறையகப்படுத்தியும், பட்டினி போட்டும் நல்வழிப்படுத்தும் அரசனைப் போல, கண்டித்து திருத்தும் இலக்கியங்கள் சில; அவை **'பிரபுசம்மிதை'** என்று அழைக்கப்படுவன.

''ஏழிசையாய், இசைப்பயனுய், என்னுடைய தோழனுமாய், யான் செய்யுந் துரிசுகளுக்கு எல்லாந் துணையாயிருந்து, பட்டறியகெட்டறியப் பார்த்திருந்து, பக்குவம் பார்த்துத் திருத்தும் தோழன் போலத் திருத்தி நல் வழிப்படுத்தும் காப்பியங்கள் சில. இவை **'சுஹ்ருத் ஸம்ஹிதைகள்'** என்றழைக்கப் படுவன; (சுகிருத்—நண்பன். நல்லெண்ணம் படைத்தவன் என்பது சொற்பொருள்)

அருமையான, உயர்ந்த இலக்கியங்களிற் சில இந்த மூன்று பயனும், முறையும் ஒருங்கமைய, அவ்வவற்றிற் கேற்ற (கதா பாத்திரங்களை) வரலாற்று உறுப்பினர்களைப் படைத்துக் கொண்டு, சமுதாயத்தில் அனைவரையுமே திருத்துவன. இவையே மகாகாவியங்கள்.

இந்த வரிசையில் தோன்றும் போதே, மகாகாவியமாகத் தோன்றியது வால்மீகி முனிவரால் இயற்றப் பெற்றது ஆதிகாவியமாகிற இராமாயணம் ஒன்றுமே. இதில் மூன்று முறையாலும் விளைகின்ற பயன்களையும் பார்க்கும் வாய்ப்பு அனைத்திலும் அடையக் கூடும்.

இதனை இந்தியத் துணைக் கண்ட முழுதும் கற்றுச் சுவைத்துப் பயன் காண இயலாமை கண்டு, தமிழரும் சுவைத்துப் பயன்கொண்டுய்யக் கம்பர் பெருமான், ஆதிகாவியமாகிற இராமாயணமாகிற பாற்கடலில், தமது நுண்மாண் நுழைபுலமாகிற கடைகயிறு கட்டிய திருக்குறள் என்னும் மந்தர மலையை, நிறுவி, முறுக வாங்கிக் கடைய முன்னின்ற போது வெளிப்பட்ட நஞ்சு கலவாத நவநீதமே கம்பராமாயணம்.

அது ஆங்காங்குக் காட்டி—ஊட்டிச் செல்லும் ஒழுக்கங்களை, நாம் உட்கொண்டு,

உயர்வற உயர்நலம் அடைய உதவுகிற அமுதம்.

இதனை அனைவரும் உண்ணலாம். அவரவர்களுக்கு ஏற்ற முறையில் குழைத்தும், உருக்கியும் கொடுக்கிற அனுபான முறைகளையும் ஆங்காங்குக் காட்டுகிறார் கம்பர். ஆதலால் கம்பர்தரும் இராமாயணம் அவரவர் தரம் அறிந்து திருத்தும் அரிய மருந்தாகிறது.

மருந்து என்றதும், 'உண்ணக் கசப்பது' 'குமட்டுவது' என்று எண்ணிவிட வேண்டாம். உண்ண-உண்ணத் தெவிட்டாத தெள்ளமுதமாய், படிக்கப் படிக்க, பழகப் பழக இனிப்பது. எண்ணிப்பார்க்க இயலாத அளவு இன்பத்தை இருமைக்கும் உதவுவது.

இம்மருந்து, நாம் கண்வழியாகக் கருத்திற் புகுந்து, ஏட்டிலும், நாட்டிலும் தோன்றும் எண்ணங்களால் வளர்ந்து, நாம் வாழுகின்ற கால தேச வர்த்தமானங்களுக்கு ஏற்ப நம்மைத் திருத்தி, உயர்வற வுயர்நலம் அருளி, நித்யானந்தப் பெரு வாழ்வில் என்றும் இருக்கச் செய்வது.

இதனைத் துணையாகக் கொண்டு, அவர் அவ்வப்போது உணர்த்திய அளவு உணர்ந்து திருந்துகிறோம்; தெளிகிறோம்: சில எடுத்துக் காட்டுக்களைக் காண்போமா? திருக்குறளில் மூன்றாவது அதிகாரம் நீத்தார் பெருமை. அதன் முதற்குறள்

''ஒழுக்கத்து நீத்தார் பெருமை
விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிபு'' என்பது.
இறுதிக்குறள்...
''அந்தணர் என்போர் அறவோர்''
மற்றெவ் வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுகலான்'' என்பது. இவற்றால் திறக்கப் பெறும் கருத்துக் கருவூலம், ''நீத்தார் ஆவார், புலன்களை வென்று அறவொழுக்கத்திற்றலை சிறந்து விளங்குகின்ற நிறைமொழி மாந்தர்களாகிய அந்தணர்களே'' என்பதாகும். இதனால் வள்ளுவர் காண்பது நீத்தாராகிய துறவோர் இலக்கணம். இதன் திரண்ட கருத்து நல்லொழுக்கத்திற் சிறிதும் தளராது நின்ற துறவிகளின் பெருமையே சிறந்த பொருள்களனைத்தினும் சிறந்த பொருளாகக் கருதப் பெறுவன, கொண்டாடப் பெறுவன. மெய் நூல்களின் முடிந்த முடிபும் இதுவே என்பதாம்.

பழைய உரையாசிரியர்களில் ஒருவராகிய மணக்குடவர் ''ஒழுக்கத்தின் பொருட்டு எல்லாப் பொருளையும் துறந்தாரது பெருமையை விழுமிய பொருள்கள் அனைத்தினும் விழுமிதாக நூல்கள் விரும்பும் என்பதாம்'' என்கிறார்.

பருதியார் 'புலன்களை வென்ற நீத்தோருக்கும், அவர்கள் படித்த நூல்களின் முடிபு சான்றாக வேண்டப்படும்' என்பர்.

காளிங்கர் 'தம் பண்டைய ஒழுக்கத்தைத் தாம் இப்போது மேற்கொண்டிருக்கும் துறவில் அடக்கிப் பழைமையைத் துறந்தார் யாவர் அவர்கள் சிறப்பையே விரும்புகின்றன வேத முதலான விழுமிய நூல்கள்' என்பர்.

இங்ஙனம் பலர் பலவாறாகச் சொல்லவும் கம்பர், குருநாதனாகிய வசிட்டர் கூறுவதாகக் கூறுகிறார் பாருங்கள்:

'கரிய மாலினும் கண்ணுதலானினும்
உரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமோரைந்தினும் மெய்யினும்
பெரியர் அந்தணர் பேசுதி உள்ளத்தால்'

என அந்தணர் பெருமையையே பேசுக: மனத்தோடு பேசுக; என்கிறார்.

அந்தணரே மூவர் தேவரினும், அத் தேவர்களின் உலகப் படைப்பிற்கு முதற் காரணமாக முதன் முதல் படைத்த ஐம் பெரும் பூதங்களிலும், அதாவது விண், விண்ணிலிருந்து வாயு—வாயுவிலிருந்து அக்னி, அதனினின்று நீர், அதனினின்று மண்ணுலகமே தோன்றின என்ற உண்மையை உணர்த்தும் வேதம், ஆகமம் முதலான உண்மை நூல்களிலும் பெரியராவர் என்ற இக்கருத்தே விழுப்பத்து வேண்டும் பனுவற்றுணிபாக-வள்ளுவர் கூறும் நீத்தார் பெருமையாகக் கம்பர் காட்டுகிறார்.

இங்ஙனம் அந்தணராவார் உலகப்பற்றை அறத் துறந்து பற்றற்றானாகிய பரமனை பற்றி நிற்பாரே ஆவர். இதனை உலகியலுக்காக மேற்பூச்சாகப் பேசாதே! இதுவே மெய்ம்மை. உள்ளத்தால் உள்ளிக்கண்ட உண்மை என்று வசிட்டர் வாயுரையாகக் கம்பர் தரும்

கருத்து. இதுவும் 'அந்தணர் என்போர் அறவோர்' என்ற வள்ளுவர் தந்த வித்தின் விளைவேயாகும்.

வள்ளுவரோ, 'அந்தணராவோர் அறவோரே! ஏன் அவர்கள் மட்டும் அறவோர் எனப்பட்டனர்?' எனின், 'மற்ற எவ்வுயிர்க்கும் செந்தண்மைபூண்டு ஒழுகலான்'' என ஏதுக்காட்டி, வள்ளுவர், மக்களுயிர்க்கு மட்டும் அன்று; தம்மினமாகிய அந்தணர் சாதிக்கு மட்டும் அன்று; எறும்பு முதல் யானையீருன எல்லா வுயிர்களுக்கும் கருணை காட்டி, உற்ற நோய் நோன்று ஓர் உயிர்க்கும் உறுகண் (துன்பம்) செய்யாது கருணை காட்டிக் காப்பவரே அழகிய தட்பத்தை யுடைமை ஏதுவால் ஆன காரணப் பெயர் பெற்ற அம் + தணர் ஆவார். இது வள்ளுவர் கண்டுகாட்டும் அந்தண்மை. அங்ஙனமாக நச்சினர்க்கினியர் அதனை இனம் பற்றிய சிறப்புப் பெயராக ஆக்குவதற்காக 'அந்தத்தை அணவுவார் அந்தணர்' அதாவது வேதாந்த விசாரம் செய்து, அந்தத்தை ஆராயும் தகுதியுடையாரே அந்தணர் ஆவார். வேதப் பயிற்சியும், வேதாந்த விசாரமும் அந்தணராகி ஓரினத்தாருக்கே உரியது; அவர்களேதான் உலகத்தில் பெரியவர். இதனை 'வாய்ப் போக்காக மேடையில் மட்டும் பேசி ஏய்க்காதே; மனம் பொருந்து தெரிந்து தெளிந்து பேசுதி' என்கிருர் ராமனை நோக்கி, அவர் குலகுருவாகிய வசிட்டர். அரிய தாமரை மேல் உறைவானினும், கரியமாலினும், கண்ணுதலானினும் பெரியர் அந்தணர் என, பெருமைக்கோர் வரம்பு காட்டி உயர்வு சொள்கிருர்.

வள்ளுவரோ, பார்ப்பான் என்ற உயர்வு, பிறப்பால் வந்தது அன்று; அவர்கள் வழுவாது ஒழுகும் ஒழுக்கத்தால் வந்ததே; ஒழுக்கம் உடைமையே குடிமை; அதனின்று ஓரிம்மி தவறினும் அத்தவறு அவனை மனிதன் என்று கூடக் கருதச் செய்யாது; செய்த குற்றத்தை மதிப்பிட்டு அதற்கு ஏற்றுற்போல— நாய்; நரி; மாடு என்று கூடக் கருதச் செய்து விடும். அதாவது' 'இழிந்த பிறப்பாய்விடும்' என்ருர்.

இதனை வரலாற்ருேட்டத்திலே வைத்துக் கம்பர், தண்டகவனத்து வாழும் முனிவர்கள் கூறுவதாக,

மாதவத்து ஒழுகலேம்; மறைகள் யாவையும் ஓதலேம்; ஓதுவார்க்கு உதவ ஆற்றலேம்; மூதெரி வளர்க்கிலேம்: முறையின் நீங்கினேம்; ஆதலால் அந்தணரேயும் ஆகிலேம் [இராம 2725] என்கின்ருர். இத்துணை விரிவும் ஒழுக்கம் உடைமைதான் குடிமையாகும்; அதனின்று இம்மி தவறுதலும் மனிதன் என்று கூட மதிக்க இடந்தராது. விலங்கினத்திலும் மட்டமான நாய் நரி ஆடு மாடுகளாக நினைக்கச் செய்துவிடும் என்ற குறட்பாவின் [குறள் 133] நேர்முக அனுபவ விளக்கமாக ஆக்கி விட்டதைக் காண்கிருேம்.

இங்ஙனமே அரசன் மகன் அரசனுகி, அரசை ஏற்றுக் கொண்டால் மட்டும் போதாது. அதனைக் காப்பாற்றிக் கொள்ள, நீதி தவருமல் நாட்டைக் காப்பாற்ற வேண்டும். கொடை, அளி, செங்கோல், குடி ஓம்பல் என்ற நான்கு குணங்களும் அமைதல் வேண்டும். ஊரவர் நாலுபேர் குறை குற்றங்கள் சொல்லத்தான் செய்வார்கள். செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்பும் மிகுதியாக வேண்டும். இப்படி இயல்பிலும், பழக்கத்தாலும் பல குணங்களைப் பெற்று, தன் நேர்மையை ஒழுக்கக் கேட்டால் பாழ்படுத்திக் கொள்ளாமல், அதாவது வேலியே பயிரை மேயாமல் விழிப்புடன் இருக்க வேண்டும்.

இத்தகைய பல ஆட்சி முறைகளை இராமபிரானே சுக்ரீவனுக்கு முடிசூட்டிவிட்டுச் சொல்கிருர் பாருங்கள்;

செய்வன செய்தல்; யாண்டும் தீயன
செய்யாமை
வைவன வந்தபோதும் வசையில
இனிய கூறல்
மெய்யன வழங்கல்; யாவும் மேவின
வெஃகல் இன்மை

உய்வன ஆக்கித் தம்மோடு உயர்வன உவந்து செய்வாய்'' என்பன முதலவாக ஓரரசன் சமுதாயத்தில் பழக வேண்டிய முறைகளைக் கூறுகிருர். இத்துணையும் வள்ளுவர் திறந்து காட்டிய உள்ளத் தெளிவுகள்.

இணைத்து எண்ணுவோமா?
'செய்தக்க அல்ல செயக் கெடும்;
செய்தக்க

செய்யாமையானும் கெடும்' என்ற ஒழுக்கம் பொதுமக்களைக் காட்டிலும் அரசற்கு இன்றியமையாதது என்பதனை வற்புறுத்தக் கம்பர் மரபு வழி வந்த மன்னனுகிய இராமபிரான்

உபதேச மொழியாகப் புதிதாக முடிசூடிக் கொண்ட சுக்கிரீவனுக்குச் சொல்லப்படுகிறது.

இங்ஙனம் அடியேன் கண்ணிற்பட்டுக் கருத்திற் பதிந்த வரை முந்நூற்றைம்பது குறட்பாக்கள் கம்பர் கவிதையிற் கலந்து, புதிய பொருளும், ஆளுமுறையால் அருமையான கருத்துக்களையும் பெற்றுள்ளன.

மேலும் ஊன்றிப் பார்த்தால் ஒய்விற்குத் தக்க வண்ணம் திருக்குறளுக்கே ஒரு புதிய, கம்பர் பெருமான் செய்த உரையையும் காணுதல் கூடும். பாடங்களும் திருந்துதல் கூடும். இரு பெரு நூல்களுக்குமே நம் உழைப்பு ஊதியந் தந்திருக்கும்: தவறு; தவறு; நம் தொண்டாவது வளர்ந்திருக்கும் என்ற பணிவுள்ளத்தோடு அமைகின்றேன்.



# "அடியார்க்கு அடியார்"

ஆத்தங்குடி திரு. பெ. மு. சுப்பையா செட்டியார்

1922-ல் காந்தி காங்கிரசில் சேர்ந்ததுமுதல் இறுதி வரை திரு. சா. கணேசன் அவர்களுடன் பழகும் நல்வாய்ப்பு எனக்கிருந்தது. இருவரும் ஒருவரை ஒருவர் நன்கு தெரிந்துகொண்டோம். திரு. சா. கணேசன் அவர்கள் குடும்பம் காரைக்குடியில் சென்ற நூற்றுண்டிலேயே செல்வாக்குடன் விளங்கிய ஒன்று. பிள்ளையார்பட்டி நகரக் கோயிலில் காரியஸ்தம் வகித்த குடும்பம். செட்டிநாட்டிலேயே பிரபலமான கானுடுகாத்தான் சா. அ. ராம. ரெங்கோன் கடையில் திரு. சா. க. அவர்களது தந்தை திரு. சாமினுதன் செட்டியாரவர்கள் ஏஜெண்டாக இருந்தார்கள். பர்மாவிலும், மலேயாவிலும் வட்டிக்கடைகள் வைத்து ஏராளமான செல்வத்தைத் தேடி வைத்திருந்தார்கள். அவர்கள் திரு. சா. க. அவர்களை இளவயதிலேயே விட்டுப் பிரிந்து விட்டார்கள்.

திரு. சா.க. அவர்கள் இளமையில் பர்மாவில் படித்தார்கள். பிரமாதமாகப் 'பள்ளிப் படிப்பு', 'கல்லூரிப்படிப்பு' என்று படிக்கவில்லை. ஆனுல் அவர்களது அனுபவப் படிப்பு, பல பட்டங்கள் பெற்றவர்களையும் விஞ்சியது. பல்கலைக்கழகங்களின் சபைகளின் உறுப்பினராகவும், பல கல்வி ஆராய்ச்சி நிறுவனங்களின் ஆலோசகராகவும் அவர்களை அமர்த்திப் பெருமைப்படுத்தியது. தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம், ஹிந்தி ஆகிய மொழிகளில் மிக்க புலமையும், சிற்பம், கல்வெட்டு, இலக்கியம், பொருளாதாரம், அறிவியல் ஆகிய துறைகளில் மிக்க ஞானமும் அவர்கள் பெற்று விளங்கியது அந்த அனுபவப் படிப்பினுல்தான்.

இளவயதில் அவர்களுக்குச் சமூகப்பற்றும், தேசியப்பற்றும் ஊட்டியவர்கள் சீர்திருத்தச் செம்மல் திரு. சொ. முருகப்பா அவர்கள். திரு. சா.க. அவர்கள் ஆரம்பத்தில் சமூகச் சீர்திருத்தத்திலும் அடுத்து தீவிரமாகத் தேசியத்திலும், பங்கு கொண்டு தன்னுடைய சொந்த தொழில் முறைகளைக் கூட கவனியாது விட்டு விட்டார்கள். நாட்டுக்காக, உழைத்து வீடு, வாசல், பொருள், உடல் அனைத்தையும் தத்தம் செய்துவிட்டார்கள்.

அவர்கள் அரசியலில் பட்ட துன்பங்களை எண்ணும்போதெல்லாம் எனக்குக் கண்ணீர் பெருகிவிடுகிறது. **'வெள்ளையனே வெளியேறு'** இயக்கத்தில் முழுப் பங்கேற்று ஆங்கிலேயருக்கு ஒரு சிம்ம சொப்பனமாக விளங்கினார்கள். வீடு, சுற்றம் அத்தனையும் துறந்து தலைமறைவானார்கள். சாமியார் வேடத்தில் வாழ்ந்தார்கள். கடைசியில் அவர்கள் தாமாக முன்வரவே தான் அரசினரால் அவர்களைச் சிறைப்பிடிக்க முடிந்தது.

கானுடுகாத்தானில் காந்தியடிகள் நுழையக்கூடாது என்று ஒரு தடை உத்தரவு. ஜவஹர் நடந்தே கானுடுகாத்தானில் நுழைந்தார். தடையுத்தரவை மீறி, பொதுக்கூட்டம் நடத்த முயற்சி நடந்தது. சுட்டு விடுவோம் என்று மிரட்டல், ஒரு பதட்ட நிலை; மிரட்டியவர்களுக்கு முன் நின்று 'எங்கே சுடு' என்று சட்டையைக் கழற்றியவர் திரு. சா.க.; அந்த மேனி கடைசி வரை சட்டையணியவில்லை. எதையும் எதிர்த்து நின்று போராடுகிறதிறமை அவர்களுடையது. நாங்கள் டெல்லி, அலகா

பொழிவின் போது கள்ளர்கள் பிடிபட்ட செய்தி கிடைத்ததாம். இது எனது நம்பிக்கையின் ஆற்றல் என்கிறார்கள். இல்லை. இது அவர்களது தூய அப்பழுக்கற்ற ஆத்ம சக்தியின் சிறப்பு தான்.

திரு. சா. க. அவர்கள் புத்தகங்களில் காணப்படும் அச்சுப்பிழைகளை வெகுவாகக் கண்டிப்பவர்கள், பிழையில்லாது மர்ரே பதிப் பக்கத்தார் வெளியிட்ட நூல்களின் ஆசிரியர் குழுவில் திறமையாகப் பணியாற்றியவர்கள். எனக்காக முழுப் பொறுப்பும் எடுத்துக் கொண்டு இரண்டு முறை ராஜாஜி அவர்களின் ''பஜகோவிந்தம்'', ''ஸோக்ரதர்'' ஆகிய நூல்களை அழகாக அச்சிட்டுத் தந்தார்; நான் அவற்றை அன்பளிப்பாக எல்லோருக்கும் வழங்கும் பெருமையையும் தேடித் தந்தார்கள், என் வீட்டில் அச்சாகும் அழைப்பிதழ்கள் போன்றவைகளைக் கூட அவர்களிடம் கொடுத்துத் திருத்தி அவர்களையே வெளியில் அச்சிட்டுத் தரச் செய்யும் வழக்கம் இருந்தது.

காஞ்சி காமகோடி பெரியவர்களிடம் பெரும் பற்றுள்ளவர்கள். சுமார் 20 வருடங்களுக்கு முன் இளையாத்தங்குடியில் பெரியவர்கள் முகாமிட்டிருந்த போது ''வித்வத் சதஸ்'' நிகழ்ச்சிகள் அனைத்தையும் மிகத் திறமையாக நடத்தி திரு. சா.க. அவர்கள் பெரும் புகழ் பெற்றார்கள். காஞ்சிப் பெரியவர்களே அதைப் பாராட்டி ''தொண்டர் குலசேகரன்'' என்னும் பட்டமளித்துச் சிறப்பித்தார்கள். அங்கு வந்திருந்த மேல் நாட்டார்கள், பலரும் இவர்களைப் புகழ்ந்ததையும், சிற்பக்கலை, ஆகமம் தொடர்பான புத்தகங்களைப் பேருவகையோடு பெற்றுச் சென்றதையும் இன்று எண்ணி எண்ணி மகிழ்கின்றேன்.

அடியேன் தகப்பனைக் கருதி வாப்பா என்று அழைத்த, செல்வமும், செல்வாக்கும் மிகுந்த திரு. சி.வி.சிடி வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் காரைக்குடி அழகப்பா கல்லூரி நிறுவனத் தலைவர். நான் சகோதரராகக் கருதிய திரு. சா.க. அவர்கள் அதன் ஆலோசனைக் குழுவைச் சேர்ந்தவர். இவர்களுக்கிடையே மன வருத்தம் ஏற்பட்டது. இவர்களது வேறுபாடு அரசியல் தேர்தல்களிலும் தொடர்ந்தது. எனக்கு பலமுறை இரு பக்கமும் இடி. இவர்கள் இருவரும் எப்படியாவது சேர வேண்டுமென்று பிரார்த்தனையும், முயற்சிகளும் எடுத்தது வீணகவில்லை. நீண்ட இடைவெளிக்குப் பின் சேர்ந்தார்கள். கம்பன் மணிமண்டபப் பணிக்கான வசூலை திரு. சி.வி.சிடி. அவர்களே முன்னின்று செய்தார்கள். கம்பன் மணிமண்டபம் வேகமாக எழுந்தது. வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்தது போல திரு. சி.வி. சிடி. அவர்களை இறைவன் அழைத்துக் கொண்டு விட்டான். அவர்கள் ஒரே ஒரு ஆண்டு மேலும் இருந்திருந்தால் கம்பன் மணிமண்டபம் என்றோ முழுமை பெற்றிருக்கும் என்று திரு. சா.க அவர்கள் நினைந்து நினைந்து வருந்துவார்கள்.

கோவையில் திரு. சா.க. அவர்களின் ஆவி பிரியும்போது திரு. ஜி.கே. சுந்தரம் அவர்களுடன் இருந்து ராமபஜனை செய்யும் பாக்கியத்தைத் தான் இறைவன் எனக்களித்தான். திரு. கம்பன் அடிப்பொடி அவர்கள் துவக்கிய கம்பன் மணிமண்டபப் பணி முற்றுப்பெற்று அவர்கள் மகிழ்வதைக் கண்டு நான் மகிழும் பாக்கியத்தைத் தரவில்லை.

உள்ளத்தூய்மையாலும், தன்னலமற்ற சிந்தனையாலும், உழைப்பாலும் உயர்வுகண்ட அவர்களின் உதவியால் நன்மை பெற்று அவர்களிடம் கடமைப்பட்டவர்களெல்லாம் அவர்களிடம் அன்பு பூண்டவர்களெல்லாம் அன்னவர்கள் விட்டுச் சென்ற பணிகளைப் பூர்த்தி செய்து, கம்பன் புகழ்பாடி கன்னித் தமிழ் வளர்த்து, அவர்கள் புகழ் உலகெல்லாம் பரவச் செய்து மகிழ்வோமாக.

அவர்களது 'தமிழ்த்தொண்டைத்தொகை' இறுதிப்பாடல், கம்பன் அடிப்பொடி பக்தர்களாகிய நம் ஒவ்வொருவருக்கும் அவ்வுணர்வை ஏற்படுத்திப் பணியை முடிக்க வேண்டும் எனத் தூண்டுமாக! இறைவனடியில் நான் இறைஞ்சி வேண்டுவது இஃது ஒன்றே.

தொன்றுதொட்டு தமிழ்மரபைக்
காப்பார்கட் கடியேன்;
துயர்அகலத் தமிழமுதம் ஊட்டுவார்கட்
கடியேன்;
'என்றுமுள தென்தமிழ்த்தாய்க் கெழில்
முடியைச் சூட்டும்
எந்தைபிரான் கம்பன்தன் அடியார்க்கும்
அடியேன்;
நின்றுவளர் கம்பன்அற நிலைக்காப்பாளர்
கடியேன்;
நெடியதமிழ்த் தாய்கோயில் புரப்
பார்கட் கடியேன்;
முன்றுளிர்க்கும் இடுக்கணவை முரிப்பார்
கட் கடியேன்;
மும்மைவளர் செந்தமிழ்த்தாய்
முளரித்தாள் சரணே.

பாத், காசி, சிம்லா, ஹரித்துவார் என்று பல இடங்களிலும் குளிரில் அலைந்தபோதும் அவர்கள் சட்டையணியவில்லை. 30° குளிரில் காலை 5 மணிக்கு கங்கையில் நீராடி, மேல் சட்டை அணியாது எதையும் தாங்கும் உறுதியையும், உடலையும் அவர்கள் எங்களுக்கு 40 ஆண்டுகளுக்கு முன்னமேயே காட்டினுர்கள்.

காந்தியடிகள் மதுரையிலிருந்து செட்டிநாடு வரும் போது மாட்டிடையர் மேலாடையில்லாது இருப்பதைக் கண்டு தானும் மேல் சட்டை அணிவதில்லை என்று முடிவு செய்தார்கள். அது தொடர்ந்து நானும் சட்டையணிவதில்லை என்று முடிவு செய்தேன். இன்று வரை அணியவில்லை. கரையில்லாத முரட்டுக் கதரில் மேல் துண்டும், வேஷ்டியும் அணிவது வழக்கம். அந்த முரட்டுக் கதர் எளிதில் கிடைப்பதில்லை. 8 கால் கதர் என்ருல் யார் வாங்குகிருர்கள் என்று கதர்க் கடைகள் புறக்கணித்து அதைவிட லேசான வேஷ்டி துண்டுகளையே விற்கின்றன. ஓரக்கரையில்லாத வேஷ்டி, துண்டும் கிடைப்பது அரிது. பல இடங்களிலும் கிடைக்காது. ஆனுல் காரைக்குடியில் கிடைக்கும். ஆம்! திரு. சா.கா. அவர்கள் பெயரைச் சொன்னுல் அவர்களுக்காக நெய்து வந்தவை எனக்குக் கிடைக்கும்.

ஒருமுறை பம்பாயிலிருந்து நாமக்கல் கவிஞர், திரு. சா. கணேசன் ஆகியோருடன் சென்னைக்கு ரயிலில் திரும்பி வந்து கொண்டிருந்தோம். காது மந்தத் தன்மையால் நானும், கவிஞரும் உரக்கப் பேசிக் கொண்டு பயணம் செய்து கொண்டிருந்தோம். நாங்கள் உரக்கப் பேசிக் கொண்டிருந்தது அந்த ரயில் பெட்டியில் பயணம் செய்து கொண்டிருந்த ஒரு ஆங்கிலேயருக்குப் பிடிக்கவில்லை. அவர் எங்களைக் கண்டித்தார். திரு. சா. கணேசன் அவர்கள் அவரிடம் எங்கள் காது மந்தத் தன்மையை எடுத்துக் கூறிப் பொறுத்துக் கொள்ளச் சொன்னுர்கள். இரண்டு, மூன்று முறை அவரைச் சாந்தப்படுத்த முயன்ருர்கள். ஆனால் அவர் விடவில்லை. அவரது விடாப்பிடியான கோபத்தில் நாங்கள் இந்தியர் அவர் ஆங்கிலேயர் என்ற ஏற்றத்தாழ்வு உணர்வும், இளப்பமான கருத்தோட்டமும் அவர்பால் இருப்பதைத் திரு. சா. கணேசன் அவர்கள் புரிந்து கொண்டார்கள். உடனே 'வந்தே மாதரம்' என்று கர்ச்சித்தார்கள். ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்த எல்லோரும் திடீரென உணர்வு பெற்று 'வந்தே மாதரம்' என்று எதிரொலித்தார்கள். ஆங்கிலேயர் அயர்ந்து போனுர். அடுத்த ரயில் நிலையத்தில் ரயிலிலிருந்து அவரை இறக்கி அதிகாரிகளிடம் இடைஞ்சலானவர் என்று கூறி ஒப்படைத்த பிறகே பயணம் மேற்கொள்ளச் செய்தார்கள்.

குற்றால முனிவர் டி.கே.சியிடம் இருவருக்கும் மிகுந்த ஈடுபாடு. அவர்கள் ஊட்டிய கவிச்சுவையெல்லாம் ரசிப்பது எனதுபோக்கு. என்னைப் போன்ற ரசிகர்களால் ரசிகமணியின் கவிச்சுவை ஊற்றுப்பெருகி வெள்ளம் வரும். ஆனால் திரு. சா.க. அவர்கள் கம்பனை ரசிப்பதோடு நில்லாமல் கம்பன் கவிரசத்தை எல்லோரும் ரசிக்கவும், போற்றவும் நிரந்தர வழி கண்டார்கள். 40 ஆண்டுகளில் கம்பன் புகழையும் கன்னித் தமிழையும் வளர்க்க ஆயிரக் கணக்கானவர்களை உருவாக்கினுர்கள். சாதி, மதம், அரசியல் என்று எந்த பேதமும் அங்கில்லை. எல்லையற்ற வெற்றி கண்டார்கள். செவிக்கும், சிந்தனைக்கும் விருந்து கொடுத்த அவர்களது 40 ஆண்டு விழாக்களிலும் நாவிற்கும், வயிற்றுக்கும் விருந்தளிக்கும் மடைப்பள்ளி வேலையை, உணவளித்து உபசரிக்கும் வேலையை, நான் மேற்கொண்டேன். பல அறிஞர்களின் நட்பும் எனக்குக் கிடைத்தது. அதனுல் மகிழவும் செய்தேன்.

25 ஆண்டுகளுக்கு முன் ஒரு ஆண்டு திரு. சா.க. அவர்களிடமிருந்த மனவருத்தம் காரணமாக காரைக்குடி கம்பன் விழாவுக்குச் செல்லவில்லை. கம்பன் எனக்குத் தண்டனை தந்தான். விழா நாட்களின் போதே ஆத்தங்குடியில் என் வீட்டில் திருட்டுப் போயிற்று. திருந்திய நான் மனத் திருப்திக்காக எனது வீட்டில் திரு. சா.க. அவர்களை இரண்டு தினம் கம்பராமாயணச் சொற்பொழிவு இயற்ற வேண்டினேன். சொற்பொழிவில் ஹனுமன் ''சீதையைக் கண்டேன்'' என்ற நேரத்தில் ''திருடனைக் கண்டோம்'' என்று போலீஸ்காரர்கள் வீட்டிற்குத் தகவல் கொண்டு வந்தார்கள். இது கம்பனைத் தெய்வமாகக் கொண்ட அப்பெரியவர்களின் ஆத்ம சக்தி.

எனது 80-வது ஆண்டு நிறைவில் என் பையன்களுக்கு எழுதித் தந்த கட்டுரையில் திரு. சா.க அவர்கள் மேற்சொன்ன நிகழ்ச்சியைப் பெருந்தன்மையோடு குறிப்பிட்டிருக்கிருர்கள். கரூர் மாரியம்மன் திருவிழாக் காரணமாக நான் கம்பர் விழாவில் கலந்து கொள்ளவில்லையாம். நான் முழு நம்பிக்கையோடு இருந்ததால் தான் அவர்களின் சொற்

# குடிமை நிலை

அருட்கவி அரங்க சீனிவாசன்

**குடிமைத் தகுதி**

குடிமக்களின் இயல்பு, குடிமை நிலை எனப் படும். இயல்பு என்பது தகுதியாகும்.

குடிப்பிறப்பு, ஒழுக்கம், வாய்மை, கல்வி, கலையறிவு, கற்பு, வலிமை, நெடுவாணான், மடியின்மை முதலியனவே தகுதிகள் என லாம்.

ஒரு நாட்டிற்கு இன்றியமையாததென்று வள்ளுவர் குறிப்பிட்ட தாழ்விலாச் செல்வம், இத்தகுதியே என்று கொள்ளலாம்.

தகுதி பெற்ற குடிகளே நாட்டின் உயர்வுக் காகவும் உரிமைகளுக்காகவும் உரிய கடமை களைச் செய்வர்.

**இருவகை ஆட்சி**

ஆட்சி, முடியாட்சி குடியாட்சி என இரு வகைப்படும்.

மக்களை அடக்கி ஆள்வதே தம் கடமை என்று ஆட்சியாளரும் அடங்கி நடப்பதே கடமை என்று மக்களும் எண்ணி, அடக்கு வதும் அடங்குவதும் செய்வதை இன்று காண் கின்றோம்.

இருவகை ஆட்சியிலும் மக்கள் ஆட்பட்டுத் தான் உள்ளனர். குடியாட்சியில் விருப்பத்தி னாலும் முடியாட்சியில் வற்புறுத்தலாலும் ஆட்படுகின்றனர்.

முடியாட்சியில் குடிகளின் நலம் பிறரிடம் உள்ளது. குடியாட்சியில் மக்கள், தங்கள் நலம் இன்னதென உணர்ந்து, அதனைக் காப் பதற்காக விழிப்புடன் இருப்பர்; இருத்தல் வேண்டும்.

முடியாட்சியில் குடிகளுக்கு ஆள்பவர் வேறு. குடியாட்சியில் தாங்களே ஆள்பவர்.

**கடமையும் உரிமையும்**

தம் நலன்வேறு, நாட்டு நலன்வேறு என்று எண்ணாமல் நடந்து கொள்வதே, குடிகளின் தலையாய கடமை என்பர்.

நாட்டுக்கு இடையூறாய் இருக்குமானால், தம் உரிமையை விட்டுக் கொடுப்பதும் குடிகளின் கடமை.

இவ்வாறு தகுதியும் கடமையும் வாய்ந்த குடிகளே உரிமைக்குரியவர் ஆவர்.

**உரிமைகள் யாவை?**

நாடெங்கும் சென்று குடியேறும் உரிமை.

கருத்தை வெளியிடும் உரிமை.

விரும்பிய சமயத்தை மேற் கொள்ளும் உரிமை.

**கல்வி பெறும் உரிமை**

தொழில் செய்யும் உரிமை முதலாயனவே முதன்மையான உரிமைகள் என்பர்.

**முடியாட்சியில் குடியாட்சி**

இருவகை யாட்சிகளிலும் கம்பன் கண்டது காட்டியது—முடியாட்சி மட்டுமே! ஆயினும், குடியாட்சியில் உள்ள அனைத்து நன்மைகளும், உரிமைகளும் மக்கள் பெற்று வாழ்ந்தனர்.

கோசலத்தை அறிமுகப் படுத்தும் போதே,

''ஆசலம்புரி ஐம்பொறி வாளியும்
காசலம்பு முலையவர் கண் எனும்
பூசலம்பும் நெறியின் புறம் செல்லாக்
கோசலம்'' என்றுதானே தொடங்குகின்றான்.

''ஆண் பெண் பேதமின்றி அனைவருமே குணவான்களாகவும் பண்டிதராகவும் ஞானிகளாகவும் இருந்தனர். மூடர் ஒருவருமே இவர்''.

என்று துளசிதாசர் காட்டும் இராம ராச்சியத்தின் கல்வி நிலையினை இங்கு ஒப்பிட்டுக் காணலாம்.

### வாய்மை

கல்விக்கும் வாய்மைக்கும் பிரிக்க இயலாத உறவுண்டு. கோசலத்தில் கல்வியைப் போலவே வாய்மையும் அரசோச்சியது.

''உண்மை இல்லை பொய் உரை இலாமையால்'' என்பது கம்பன் வாக்கு. அங்கு எல்லாருமே வாய்மையாளராய் இருந்தனர் என்பது அத் தொடரின் பொருள்.

எல்லாருமே வாய்மையாளராய் இருந்தமையால், பொய் என்பதே என்ன என்று ஒருவருக்கும் தெரியாமல் போயிற்றாம். ஆதலால், தசரதன் ''பொய்ச் சொல் கேளா மன்னவன்'' ஆக இருந்தானாம்.

பொய் பேசுவார் ஒருவரும் இல்லாமல் இருந்தால்தானே, பொய்ச்சொல் கேளாமல் இருக்க இயலும்!

### சமயங்கள்

மனிதனை வாழ் வாங்கு வாழ்வித்து, தெய்வ நிலைக்கு ஏற்றவே சமயங்கள் தோன்றின. சமயப் பற்றால் விளைவது தெய்வ நம்பிக்கை.

தெய்வ நம்பிக்கை இல்லாதவர்; ''கண்டதே காட்சி, கொண்டதே கோலம், உண்டதே உண்டி, விண்டதே வேதம்'' என்று அகந்தை பேசி அடுத்தவர்க்கு அல்லல் விளைவிக்கக் கூசமாட்டார்.

சமயப் பற்று இன்றியமையாதது. ஆனால் சமய வெறி கூடாது. என் தெய்வம் உன் தெய்வம் என்று எங்கும் தொடர்ந்து எதிர் வழக்காடுவது ஒருமைப் பாட்டைக் குலைக்கும்.

கோசலத்தில் சமயங்கள் பல இருந்தன. அவை, ஒழுக்கத்தின் ஊற்றுக் கண்களாய் விளங்கின; பனகல் பாசறைகளாக மாறவில்லை.

காவியத் தொடக்கத்திலேயே கம்பன், சமயப் பொதுமையை வற்புறுத்துகின்றான். காப்புச் செய்யுளில் மட்டுமா! மழைமேகத்துக்குக் கையாளும் உவமை வாயிலாகவும் சமயப் பொதுமையைப்—பொறுமையை—உணர்த்தி விடுகின்றான்.

பல்பெருஞ் சமயம் சொல்லும் பொருள் ஒன்றுதான். அப் பொருள், உடம்புதோறும் உயிர் எனப் பரவியுள்ளது. ஊழ் கொண்ட சமயத்து அன்னான் உருவினை முழுமையாக ஒருவரும் கண்டிலர் என்பன போன்ற கருத்து மணிகளைக் காவியம் முழுதும் உடம்பொடு புணர்த்தலாய்—மணிமிடை பவளமாய் விரவி வைத்துள்ளான் கம்பன்.

### சாதிகள்

சாதிகளை ஒழித்தே தீருவோம் என்று சூளுரைத்துப் புறப்பட்டவர்கள், அறிந்தோ, அறியாமலோ பட்டியலை விரிவாக்கிச் சாதிகளுக்கு அமரத்துவம் தந்துவிட்டதைக் காண்கின்றோம்.

ஒரு நாட்டின் வளர்ச்சிக்குத் தொழில்கள் இன்றியமையாதன. தொழில்கள், திறமையாகவும் சிக்கனமாகவும் விரிவாகவும் விரைவாகவும் வளர்வதற்கு, அவ்வத் தொழிலில் பண்பட்ட மக்கட் பிரிவினர் இருக்கத்தான் வேண்டும்.

குடிகள் அனைவரும் பிறப்பால் ஒத்தாலும் தொழிலின் சிறப்பால் வேறுபட்டுத்தான் இருப்பர் என்பார் வள்ளுவர்.

திறமை வாய்ந்த தச்சனால் சீரிய செருப்புத் தைக்க இயலாது; கொத்தனால் இருப்புக் கருவிகள் செய்ய இயலாது.

ஒருவர், தமக்குரிய தல்லாத தொழிலைக் கற்றுக் கொண்டு செய்யலாம். ஆயினும், வழிவழியாய்ச் செய்பவர்க்கு நிகராக அத் தொழிலைத் திறம்படச் செய்வது கடினமேயாகும். ஒரு தச்சன் மகன், தனியாகத் தச்சுத் தொழிலைக் கற்றுக் கொள்ள வேண்டுவதில்லை. 'தந்தையறிவு மகன் அறிவு' என்பதற்கிணங்கத் தந்தை செய்யும் தொழிலை நேரில் கண்டும், உதவி செய்தும் அத் தொழிலில் அனுபவமும், திறமையும் பெற்றுவிடுவான்.

பன்னெடுங்காலமாய் மன்னனே உயிர், மக்கள் வெற்றுடல்களே என்று இறுமாந்து, மனம்போன போக்கில் நடந்த அவலங்கள் கோசலத்தில் இல்லை. மக்களே உயிர், மன்னவன் உடல் மட்டுமே என்னும் அற ஆட்சி அங்கு நிலவியது.

**கல்வி**

குடிமைக்குரிய தகுதிகளில் முதன்மையானது, கல்வியே என்பதை யாரும் மறுக்க இயலாது.

> ''கல்வி மக்களுக்கெல்லாம் சொந்தம். அவர்கள் உள்ளத்தே அது, ஆழமாக ஊன்றப் படல் வேண்டும். உணர்வையும், சிந்தனையையும், மனஉறுதியையும் வளர்த்துச் செயலுணர்வைக் கிளறி விடக் கல்வியால்யான் இயலும்''.

என்பது, புதுயுகச் சிற்பி லெனின் கருத்து.

> ''கல்வியே இல்லாரும் அரை குறைக் கல்வியாளரும் நாட்டுக்குப் பயன் பட மாட்டார்கள்''.

என்பது, கிரேக்க ஞானி சாக்ரட்டீசின் சிந்தனை வீச்சு.

கோசலத்தில் 'கல்வி முளைத்து, கேள்விக் கிளை விட்டு, தவமாகிய இலைதழைத்து, அன்பு அரும்பி, அறம் மலர்ந்து, இன்பக் கனிபழுத்தது' என்னும் உருவகத்தால், கல்வி மட்டுமன்று, கற்ற வழி நிற்றலும் அந் நாட்டுக் குடிகளிடம் நிலை பெற்றிருந்ததை அறிகின்றோம்.

நாவில் எல்லாம் நீதி நூல்கள் நடனமாடின. ஆதலால், வாய்மை அந் நாவினில் உடன்குடி கொண்டது என்பதனை,

''நாமுதற் படுவ மெய்யும்
நாம நூற் பொருளும்'' என்ற
தொடரால் அறிகின்றோம்.

**கேள்வி**

கல்விமட்டுமா? மருந்தினும் இனிய கேள்வி செவியுற மாந்துவராய்க் குடிகள் விளங்கினர்.

''கல்லாது நிற்பார் பிறர் இன்மையின்
கல்வி முற்ற
வல்லாரும் இல்லை, வல்லர் அல்லாரும்
இல்லை''

என்ற நிலை இருந்தது.

பெண்களுக்கும் கல்வி பொதுவாக இருந்தது.

''பெருந்தடகெண் பிறைநுதலார்க்கெலாம்
பொருந்து கல்வி பூத்தது''

**கலை**

கல்வியின் முடிநிலையே கலை எனலாம். கோசலம் ஒரு கலைக் களஞ்சியமாகவே விளங்கியது.

''தண்டலை மயில்கள் ஆடத்
தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக்
குவளைகள் விழித்து நோக்கத்
தெண்திரை எழினி காட்டத்
தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட
மருதம் வீற்றிருக்கும்''

என்பது கம்பன் செய்யும் கோசல நாட்டின் அறிமுகம்.

கலை தெரி கழகங்கள் நாடெங்கும் இருந்தன. அங்குச் செவி நுகர்கனிகள் அனைவர்க்கும் கிடைத்தன.

பண் இசை, யாழிசை, ஓவியம் முதலாய நுண் கலைகள் அறியாதார் அறியாதாரே!

**கற்பு**

கல்வியின் பயன் கற்றவழி நிற்றல் என்று முன்பே குறிப்பிட்டோம். கல்வியின் பயன் 'கற்பு' எனப்படும். கற்பு என்பது பெண்களுக்கு மட்டுமே உரியது என்று தவறாய்க் கருதுகின்றோம்.

அதனை இரு சாரார்க்கும் பொதுவில் வைப்போம் என்று முழங்கினான் பாரதி.

கோசலத்தில் கற்பு இரு சாராருக்கும் பொதுவாகவே இருந்தது.

''மாதரார் கற்பின் நின்றன காலமாரி'' என்று கூறிய கம்பன், ''ஏகும் நல்வழி, அவ்வழி என்மனம் ஆகுமோ!'' என்ற இராகவன் கூற்றின் மூலம், அக்கற்பு ஆடவர்க்கும் உரியதாக இருந்தமையை உணர வைக்கிறான்

பகைவரால் நாட்டுக்குக் கேடு வருமாயின், அணி வகுத்து எதிர்த்துப் படை ஏந்தும் கடமை ஒவ்வொரு குடிமகனுக்கும் உண்டு. அவ்வாறு எதிர்த்து நிற்பதற்கு உடலுறுதியும் உள்ளத் திண்மையும் வேடுமே! ஆதலால், திண்ணியராதல் குடிகளுக்கு உரிய தகுதிகளுள் ஒன்று என்று கருதுகின்ருன் கம்பன்.

கோசலக் குடிகளின் பொழுது போக்கு எது தெரியுமா?

யானைப்போர், எருமைக்கடாப் போர், செம்மறிக்கடாப் போர், சேவற் போர் முதலாய வீரப் போர்களைக் காண்பதும் குதிரை ஏற்றமும் விற் பயிற்சியும் பெறுவதுமே குடிகளின் பொழுது போக்கு.

இவை யாவும் மனத் திண்மையும் உடல் வலிமையும் வளர்ப்பன என்பதில் தடை உண்டோ?

மக்கள் திண்ணியராய் இருப்பதால், பகைவர் படையெடுக்க அஞ்சி அடங்குவர். ஆதலால் தாம் பெற்ற—கற்ற—வலிமையைப் பயன் படுத்தும் வாய்ப்பு, குடிகளுக்குக் கிட்டுவதில்லை.

''திண்மை இல்லை, நேர் செறுநர் இன்மையால்'' என்னும் தொடர் காட்டும் பொருள் இது.

**உழவு**

ஒருநாடு எத்தகு செல்வம் வாய்த்திருப்பினும் உழவும் தொழிலும் இல்லையேல், அந்நாடு நிலைத்திருப்பது அரிது.

இதனைக் கருதியே கம்பன், காவியத் தொடக்கத்திலேயே,

''ஆறுபாய் அரவம்; மன்னர்
ஆலைபாய் அமலை; ஆலைச்
சாறுபாய் ஓதை; வேலைச்
சங்கின்வாய்ப் பொங்கும் ஓசை;
ஏறுபாய் தமரம்; நீரில்
எருமைபாய் துழனி; இன்ன
மாறுமா ருகித் தம்மில்
வயங்கும்மா மருத வேலி''

என்று உழவோசையை நம் செவிக்கு விருந்தாக்குகின்றான்.

**தொழில்**

கோசலத்தில் தொழில் வளமும் மிக்கிருந்தது. நுரையினும் மெல்லிய நுண்துகில்களும், வண்ண வண்ண ஆடைகளும், மதிற் பொறிகளும், அயில் முதலாய படைக்கலங்களும், அணிகலன்களும், எழுநிலை மாடங்களும் தொழில் வளத்துக்குச் சான்றாக அங்கே காண்கின்றோம்.

அதுமட்டுமா? சுரங்கங்களிலிருந்து மாணிக்கம் முதலாய கனிபடுபொருள்களைக் கொணரும் தொழிலும் நடந்தது என்பதை ''நவமணி பிலம் சுரக்கும்'' என்னும் தொடரால் அறிகின்றோம்.

**வணிகம்**

உழவும் தொழிலும் இருந்தால் போதுமா? உற்பத்தியான பொருள்களைத் தொலைநாடுகளில் சென்று விற்கவும் சில பொருள்களைக் கொணரவும் வேண்டுமே! அப்போதுதானே ஒரு நாடு சிறப்பெய்தும்!

பொருள் பரிமாற்றம் செய்வது வணிகர் தொழில். வணிகத் தொழில் கோசலத்தில் நன்கு நடந்தது.

''மணியும் பொன்னும் மயில்தழைப் பீலியும்
அணியும் ஆனைவெண் கோடும் அகிலும் தான்
இணையில் ஆரமும் இன்ன கொண்டே கலால்
வணிக மாக்களை ஒத்தது அவ் வாரியே''

என்று வணிகச் செய்தியை உவமையாகக் காண்கின்றோம்.

''இந்நகர் ஆவணம் கண்டபின் அளகை தோற்றது''

''கலம் சுரக்கும் நிதியம்''

''பாதைகள் சொரிவன பருமணிகனகம்'

''நிறைபரம் சொரிந்து வங்கம்
நெடுமுது காற்றும் நெய்தல்'' எனப் பல இடங்களிலும் கடல் வணிகத்தைச் சுட்டுகின்றான் கம்பன் [பாதை—ஓடம்]

**மடியின்மை**

குடிமைக்குரிய மற்றொரு தகுதி மடியின்மை, திருமகள், மடியுடையானைமூதேவிக்

கொல்லன் மகன் தச்சுத் தொழில் செய்வ தானால், பல ஆண்டுகள் முயன்று பழகுதல் வேண்டும். அவ்வாறு பழகினாலும் அவன் நிறமையான தச்சனாவது அரிது.

தொழிலால் வேற்றுமை இருக்கலாம். ஆனுல் உயர்வு தாழ்வு மட்டும் அறவே கூடாது.

சாதிகள் இழுக்கத்துக்காக ஏற்பட்டன அல்ல. ஒழுக்கத்துக்காக ஏற்பட்டனவே என்னும் கருத்தைக் ''குலம் சுரக்கும் ஒழுக் கம் குடிக்கெல்லாம்'' என்ற தொடரால் கம்பன் காட்டுகின்ருன்.

மக்கள் தத்தம் குடிப் பிறப்பிற்குரிய தொழில்களைச் செய்து கொண்டு போகும் போது, சச்சரவுக்கு இடமேது? உயர்வு தாழ்விற்கு அவசியம் ஏது?

''மக்கள் தத்தம் கடமைகளில் (சுதர்மத் தில்) ஈடுபட்டிருந்தமையால் இன்பமாக வாழ்ந்தனர்'' என்று, துளசி தாசர் காட்டும் இராம இராச்சியம் இங்கு நினைவுக்கு வாராமல் போகாது.

ஆதியில் மனித குலத்தில் எவ்விதப் பிரிவும் இல்லே. ஒரே இனமே இருந்தது. நாளடை வில் அறிவு விரிவடைந்து, உழவு முதலாய தொழில்களில் ஈடுபட்டபோதே, தொழில் வழிப் பிரிவுகள் தோன்றின. இஃது இன் றைய அறிவியலாரும் ஒப்பிய உண்மை.

இவ்வறிவியல் கருத்தை அன்றைக்கே கம்பன் ''ஒன்றின் ஒன்று குலமெனப் பிரிந் தது'' என்று நீர்க்கால் பிரிதற்கு உவமை கூறுவதன் மூலம் செறித்துக் காட்டுகின்ருன்.

ஒரு நாட்டின் வளர்ச்சிக்குச் சாதிகள் இருப் பது தடையன்று. மாருய் உதவியாகவும் இருக்கின்றது என்பதும் கம்பன் கருத்து.

கோசல நாட்டில் உழவர், மழவர்,பாணர், துழையர், கோவலர், எயினர் முதலாய பல் வேறு சாதியினரை அறிமுகப்படுத்தி, அவர் கள் சரி நிகர்சமானமாகவே வாழ்ந்தனர் என்று கம்பன் அறிவுறுத்துகின்ருன்.

**தனியுடைமையில் பொதுவுடைமை**

கோசலத்தில் இருந்தது, தனியுடைமைப் பொருளாதாரமே. ஆயினும், அந்த தனி யுடைமை, பொதுவுடைமைப் பயனைத் தந் தது.

முடியாட்சியிலேயே குடியாட்சியின் நலன் களே இணைத்து அற்புதம் செய்த கம்பன், தனியுடைமையில் பொதுவுடைமைப் புதுமை யைப் புகுத்தியது—புதுக்கியது—வியப்பில்லை அன்றோ!

''தனக்கு மட்டும் என்று பொருள் ஈட்டு வோன் கயவன்.''

''தனக்கும் தன்னைச் சார்ந்தோர்க்கும் என்று ஈட்டுவோன் மத்திமன்.''

''இன்னார் இனியார் என்னாமல் ஒப்புர வுக்கென்றே ஈட்டுவோன் சான்றோன்''

என்பது பொதுவான இலக்கணம்.

கோசலத்தில் குடிகள் அனைவரும் ஒப்புர வாளராகவே, சான்றோராகவே விளங்கினர்.

வள்ளுவர் காட்டிய ஒப்புரவும், மகாத்மா அறிமுகம் செய்த தர்மகர்த்தா முறையும் அங்கு நிலேபெற்று இருந்தன.

பழுமரம் உள்ளூர்ப் பழுத்ததுபோல், உள்ளி உள்ள வெல்லாம் உவந்து ஈயும் வள்ளியோர் அங்கு நிரம்பியிருந்தனர்.

விருந்தினர் முகம் கண்டநாளே விழா நாளாகக் கருதப்பட்டது. விருந்தினரை வரவேற்பதற்காகவே மங்கல வள்ளைகள் வீடுதோறும் முழங்கிக் கொண்டிருந்தன.

தனக்கென வாழாப் பிறர்க்குரியாள ராகவே குடிகள் இருந்தமையால், அங்கு வண்மையே இல்லை என்று நயம்பட உரைக் கின்றான் கம்பன்.

''எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே இல்லாரும் இல்லை; உடையார் களும் இல்லை'' என்பது கம்பன் காட்டும் குடிமைநிலை.

கம்பனை அடியொற்றியே துளசிதாசரும் ''எல்லாரும் தமக்குள் ஒத்த அன்பு காட்டு வர். ஆதலால், வறியர் யாரும் இலர். வருந்து வோரும் இலர். ஆதரவற்றோரும் இலர்'' என்கின்றார்.

**உடல்வலிமை**

குடியாட்சியாயினும் முடியாட்சியாயினும் ஆட்சியில் பங்கு பெறும் வாய்ப்பு, குடி களுக்கு வாய்ப்பது உண்டு. அமைச்சர், அலுவலர், படைத்தலைவர், புரோகிதர் முத லாய பதவிகளே வகிப்போர் குடிகள்தாமே!

முடிசூட்ட எண்ணியபோது, அமைச்சரிடம் ஆலோசனை கேட்டான்.

இராமன் காட்டிற்குச் செல்ல நேர்ந்த போது, அவ்வூர்க் குடிகள் பலவாறு தங்கள் கருத்தை வெளியிடலாயினர். சிலர் அர சனையே வெறுத்து இகழ்ந்து பேசினர். ''என்னே நிருபன் இயற்கை இருந்தவா! தன்நேர்இலாத தலைமகற்குத் தாரணியை முன்னேகொடுத்து முறைதிறம்பத் தம்பிக்குப் பின்னே கொடுத் தால் பிழையாதோமெய்'' என்பது குடிகள் வெளியிட்ட விமரிசனம்.

''வாய்மை என்று, வாய்மைக்குப் புறம் பாக அரசன் நடந்து கொண்டானே'' என்று துணிவுடன் மக்கள் பழித்துப் பேசும் அளவிற் குக் கருத்துரிமை அங்கு இருந்துள்ளது.

குடிகளின் கருத்திற்கு முதன்மைதரும் வழக்கம் கோசலத்தில் இருந்தமையாலேயே, வீடணன் அடைக்கலம் அடைய வந்தபோது, இராமன், வானர வீரரின் கருத்தை உசாவி யறிந்தான் என்று கொள்ளலாம்.

கம்பனை அடியொற்றியே துளசிதாசரும் சுவேலமலை உச்சியில் சந்திரோதயம் கண்ட போது, வானர வீரர்களின் கற்பனைக்கருத்து களைக் கேட்டறிந்தான் என்று ஒரு காட்சி யமைத்துள்ளார்.

## வழிகாட்டி வாழ்வு

கோசல நாட்டுக் குடிமக்கள், தகுதிகளை வளர்த்து, கடமைகளை நிறைவேற்றி, உரிமை களைப் பெற்று, இன்றைய நிலைக்கும் வழி காட்டிகளாய் விளங்கினர்.

காந்தியடிகள் கனவு கண்ட இராம இராச்சி யத்தைத் தசரத இராச்சியமாகப் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பே கற்பனையில் காட்டிய கம்பன் புகழ்பாடிக் கன்னித்தமிழ் வளர்ப் போம்!

குக் காட்டிக் கெடுத்து விடுவாள் என்பார் வள்ளுவர்.

மடியும் நிதியும் இணையவே இயலாத இரு துருவங்கள் என்பது ஆன்றோர் கருத்து.

> ''எப்போதாவது வறுமை ஒரு நாட்டில் காணப்படுமாயின், அங்கே கொள்ளையரும், முடிச் சவிழ்ப்பாரும், கோயில் திருடரும் ஆகிய பல வகைத் தீயோரும் மறைந்துள்ளனர் என்பது தெளிவு''

என்பது கிரேக்கப் பேரறிஞர் சாக்ரட்டீசின் பொருளுரை.

மடிதான் வறுமைக்குத் தாய். ஆதலால் மடியணுகாமல், கடியரண் அமைத்துக்கொள்வதில் குறியாயிருப்பது, குடிகளின் தலையாய கடமை யாகின்றது.

மடியில்லாமையால்தான் கோசலத்தில் பொருந்து கல்வியும் செல்வமும் பூத்தன.

செல்வம் ஓரிடத்தே குவியுமானால், கள்வர் பயம் முதலாய ஊறுகள் நேரலாமே! மடியுடையோரே வறியர் ஆவர். வறியோரில் சிலரே கள்ளர் முதலாய கயவராய் மாறுவர் கோசலத்தில் மடிக்கே இடம் இல்லாமையால் எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தி வாழ்ந்தனர். அதனால் கள்வாரும் இல்லை; பொருள்காவலும் இல்லை.

மடியன்மையால் வந்த செல்வம், ஆண்களுக்கு மட்டுமன்று; பெண்களுக்கும் உரிமையாய் இருந்தது.

கல்வியைப் போலவே செல்வத்திலும் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்ந்தனர் என்பதனைப் ''பெருந்தடங்கண் பிறைநுதலார்க்கெலாம் பொருந்து செல்வமும் ஒத்தது'' என்னும் தொடரால் அறிகின்றோம்.

### நெடுவாணாள்

அரசு கோல் கோடினால், மழை வளம் குறையும்; மழைவளம் குறையுமானால் வறுமையும் வறட்சியும் தோன்றும். வறுமை வறட்சிகளால், அகால மரணங்கள் நேரும் என்பது வான்மீக முனிவரின் கருத்து.

தாய் ஒக்கும் அன்பாட்சி நடந்தமையால், மக்கள் வாணாள் நீண்டது என்பதை ''கூற்றம் இல்லை ஓர் குறை இல்லாமையால்'' என்ற தொடரால் அறிகின்றோம்.

கிட்கிந்தையில் வானரச் சேனையைக் கண்ட இராமன்; ''இச் சேனைக்கு ஓர் தொகையும் உண்டு கொல்!'' என்று வியந்து நின்றான்.

''முன் எப்போதோ ஒரு காலத்தில், இப் படையின் அளவு எழுபது வெள்ளம் என்று மறைவல்லோர் கணித்ததாகக் கேள்வி. அதற்குப் பின், வாலியின் நல்லாட்சியின் பயனாய் மரணமே நேராமையால், இப்போது பல மடங்காய்ப் பல்கிப் பெருகியுள்ளது'' என்பது சுக்கிரீவன் விடை.

இச் செய்தியால் நீண்ட வாணாளும் குடிகளுக்கு இன்றியமையாத தகுதி என்பது உய்த்துணர்கின்றோம்.

### உலகுக்குப் புகலிடம்

கல்வி, செல்வம், வலிமை, நெடுவாணாள் ஆகியவை பெற்றுள்ள குடிகளைக் கொண்ட நாடுகள், பிற நாடுகளை அடக்கியாள முயல்வது கண்கூடு. அந் நாளிலேயே இலங்கைப் பேரரசு இதனைத்தானே செய்தது.

கோசலமோ உலகுக்கே தாயகமாக—புகலிடமாக—விளங்கியது.

தேவர்க்கும் முனிவர்க்கும் ஓர் இடையூறு நேருமாயின், அவர்கள் முறையிட வரும் இடங்கள் கைலை, பாற்கடல், பிரமன் உலகம், இந்திரன் உலகம், அயோத்தி ஆகியனவே என்று கோசிகன் கூறுவதிலிருந்து, கோசலத்தின் பெருமிதமும் பெருந்தகைமையும் அறிந்து கொள்கின்றோம்.

> ''வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
> விருந்தும் அன்றி விளைவன யாவையே''

என்று கம்பன் எழுப்பிய வினாவும் இதனை உறுதிப் படுத்துவதைக் காணலாம்.

### கருத்துரிமை

குடிகளுக்குரிய உரிமைகளுள், தலையானது கருத்துரிமையே. பேச்சுரிமை எழுத்துரிமை யாகிய எல்லாம் கருத்துரிமையில் அடங்கும்.

முடியாட்சியில் பெரும்பான்மையும் கருத்துரிமைக்கு இடம் இருப்பதில்லை. அமைச்சர் போன்ற உயர் பதவியினர்க்கு மட்டுமே அவ்வுரிமை ஓரளவு இருக்கலாம். சில நல்ல அரசர், அமைச்சர் ஆகியோரின் கருத்திற்கு இடம் கொடுப்பதுண்டு.

அமைச்சர் கருத்து அறிந்தே தசரதன் ஆட்சி செய்தான் என்று அறிகின்றோம். இராமனுக்கு

## நன்றி பல சொன்னோம் நயந்து...

இம்மலரை இவ்வளவு சிறப்பாய்க் கொண்டு வர உதவிய மலர்க் குழுவினர்க்கும், அதன் தலைவராய்ப் பணியாற்றி உதவிய அன்பர் **டாக்டர் எம். ஏ. எம். இராமசாமி** அவர்களுக்கும், விளம்பரங்கள் தந்துதவிய தகைமையாளர்கள் அனைவருக்கும், எங்கள் விருப்பப்படியே கேட்ட தலைப்புகளில் கட்டுரை எழுதி உதவிய அறிஞர் பெருமக்களுக்கும், குறுகிய காலத்தில் மணம் விரி மலராய்ப் படைத்துத் தந்த பி.என்.கே. அச்சகத்தாருக்கும் திருவாளர் **பி. வேணுகோபால் ரெட்டி** அவர்கட்கும், ரஸிக ஞானமும், நேசக்கரமும் கொண்ட அன்பர் **மாம்பாக்கம் நா. சந்திரசேகரன்** அவர்கட்கும், மலருக்காகப் பல்வகையாலும் உதவிய அன்பர்கள் அனைவருக்கும் எங்கள் சென்னி பணிந்த வணக்கமும், செம்மதுரத் தமிழில் நன்றியும் காணிக்கையாக்கிக் களிக்கின்றோம்.

காரைக்குடி
*30-3-1988*

**கம்பன் கழகத்தார்**